# பாற்கடல்

(பலர் எழுதிய சிறுகதைகள்)

★

தொகுப்பாசிரியர் :
ஐ. சாமிநாதன்

★

அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட்
தேனாம்பேட்டை :: சென்னை-18

உரிமை பதிவு
அமுதம் மலிவு—52
(அமுதக் கதம்ப வரிசை 6)
முதற் பதிப்பு: அக்டோபர் 1960

விலை 30 காசு

## பொருளடக்கம்



நேஷனல் ஆர்ட் பிரஸ், தேனும்பேட்டை, சென்னை-18

# பாற் கடல்

## அனே

*(ஸ்ரீரஞ்சனி)*

எஞ்சினீயர் சங்கரன் ஸ்தலத்தைப் பார்வையிட வருகிருரென்ருல், வேறு எப்படி இருக்கும்? ஒரே கூச்சல், இரைச்சல்தான்!

"மேற்குப் பகுதி வேலையை இப்போது யார் பார்த்துக் கொள்கிருர்கள்? எவனுவது ஒரு கூறு கெட்டவன் கையில் ஒப்படைத்திருப்பீர். உமக்கென்னய்யா, பொறுப்பா தெரிகிறது?"

சங்கரன், சாட்சாத் கைலயங்கிரி வாசனுன சங்கரனையே எரித்துச் சாம்பலாக்கும் அளவுக்கு அனல் கக்கிக் கொண்டிருந்தார்.

ஈசுவரன் மிகவும் சிரமப்பட்டு எச்சிலைக் கூட்டி விழுங்கிக் கொண்டார். பதில் ஏதும் தவருகப் பேசிவிடக் கூடாதே என்ற காரணத்தால்.

"என்னய்யா! மென்று விழுங்குகிறீரே! உம்மையெல்லாம் கொண்டுவந்து என் கிட்டே, அதுவும் இந்த மாதிரி பெரிய திட்டங்கள், வேலைகள் நடக்கிற இடத்திலே, போட்டு விடுகிருன் கம்பெனி முதலாளி. வேலை குட்டிச் சுவராகப் போனுல் அவனுக்கு என்ன? நான் வந்து ஒரு வாரம் ஆகிறது. வேலை என்ன நடந்திருக்கிறது? ஹூம். பேசுமேன் ஐயா!"

ஈசுவரன் பதில் சொல்லத்தான் விரும்பினுர். ஆனுல் விரும்பியதைச் சொன்னுல்? வயிறு என்று ஒன்று இருக்கிறதே! தனக்கும் தன்னை நம்பி உட்கார்ந்திருக்கும் குடும்பத்தாருக்கும் வழி? மேலதிகாரியை எதிர்த்து அவமரியாதையாகப் பேசினுன் என்ற பட்டப் பெயருடன் சீட்டும் கிழியும். ஏதோ சம்பளம், போனஸ் என்று தவருமல் படியளக்கிருனே, அதில் மண்ணை வாரிப் போட்டுக் கொண்டு விடுவதா......? மேலே போய் விமோசனம் காண முடியுமோ என்னுல் தயை, தாட்சணியம், நியாயம், எல்லாம்தான் மானேஜிங் டைரக்டரின் டபேதார் போல் கைகட்டி வாய் புதைத்து ஒதுங்கிப் போய்விடுகின்றனவே! அதனுல்தானே எத்தனையோ தடவை சங்கரன் ஆலகால விஷம் போல் கக்கிய சுடு சொற்களை ஈசுவரன் விழுங்கி யிருக்கிருர்.

மீண்டும் சங்கரன் குரல்.

"ஆள் இடிச்ச புளி மாதிரி நிற்கிறார் பார்! சொல்வது கொஞ்சமாவது காதில் ஏறுகிறதா? ஏனய்யா, சொல்லுமேன்!"

ஈசுவரனுக்குக் காதில் விழவில்லை. விழாதுதான். காரணம், அவரது காதில் அப்போது ஒலித்துக்கொண்டிருந்தது அவருடைய குடும்பத்தாரின் ஓலம்தான்!

வெளியிலிருப்பவன் வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ, என்று பேசிவிடுகிறான். ரூபாய் ரூபாயாகச் சம்பளம் வருகிறதைச் சொல்லுகிறானே தவிர, போகிறதை எவன் பார்க்கிறான்?

வியாதிப் பிண்டமாகப் படுத்திருக்கும் மனைவிக்கு என்ன செலவாகிறது என்பது அவருக்கும் அவரைப் படைத்த கடவுளுக்கும் மட்டுமே தெரிந்து இருக்கக்கூடிய பரம ரகசியம். மனைவியின் நோஞ்சல் உடம்புக்கு இந்தக் குறிப்பிட்ட ஊரின் சீதோஷ்ண நிலை ஓரளவு அனுகூலமாயிருக்கிறது என்ற ஒரே காரணத்திற்காகப் பல்லைக் காட்டி, மண்டியிட்டு, கெஞ்சாததெல்லாம் கெஞ்சி அந்த அணைக்கட்டுப் பிரதேசமென்ற பொட்டல் காட்டுக்கு மாற்றல் வாங்கிக்கொண்டு வந்தார் ஈசுவரன்.

உத்தியோக ஒழுங்குக்குப் புறம்பாக எதையுமே செய்ததில்லை; செய்ய மாட்டார் அவர். காலணாக் காசுகூட லஞ்சமென்று கண்ணெடுத்தும் பார்க்க மாட்டார். அதனால் அவருக்குக் கீழ் உதவியாளர்களாகப் பணியாற்றிய பலரது பொல்லாப்பையும் சாபத்தையும் வாங்கிக் கட்டிக் கொண்டிருந்தார். அதுவேறு கதை!

மகன் படிக்க, மகள் படிக்க, மனைவிக்கு மருந்தும் பழமும் வாங்க, பழைய கடன்களை அடைக்க; ஆள் புதுக் கடனில்லாமல் தள்ளுவதே விழி பிதுங்குகிறது. இந்த ஒன்றரையணா வேலைக்கும் ஆபத்து வந்து விட்டால், சந்தி சிரிக்க வேண்டியதுதான்! இந்த ஒரே நினைவு-பயம்தானே எந்த வார்த்தை காதில் விழுந்தாலும், காதில் விழாததுபோல் நடந்து கொள்ளப் பழக்கியிருந்தது அவரை?

"வீணாக ஒரு மனுஷனைக் கெடுக்க வேண்டாமே என்ற ஒரே காரணத்துக்காகத் தானய்யா பார்க்கிறேன். வேலை தெரியவில்லை, வேலையிலே சிரத்தையில்லை என்றால், இங்கே வந்து உட்கார்ந்து கொண்டு, ஏனய்யா எங்கள் பிராணனை வாங்குகிறீர்?"

சங்கரன் 'புல்டோசர்' போல நின்றிருந்த இடத்திலேயே ஒரு சுற்றுச் சுற்றித் திரும்பி, ஜீப்பில்போய் ஏறிக்கொண்டார்.

"நாளைக்குள்ளாக 'டெம்பரரி பிரிட்ஜ்' வேலையாவது முடியணும். நான் மேற்கே போய்விட்டுத் திரும்பும்போது, ரெடியாயில்லை என்றால் நான் என்ன செய்வேன் என்று எனக்கே தெரியாது. அதைப் பற்றி எனக்குக் கவலையுமில்லை"—சங்கரனின் குரல் தேய்ந்து மறைய, ஜீப் தூரத்தே சென்று ஒரு புள்ளியாக மறைந்தது!

அடித்த சிலையாய் நின்று விட்டிருந்த ஈசுவரன், உணர்வு பெற்று அசையச் சற்று நேரம் ஆயிற்று. அவருக்கு இந்த அனுபவம் புதிதல்ல. அந்த அணைக்கட்டுப் பகுதியில் கண்டிராக்டர்களான பிரபல எஞ்சினீயரிங் கம்பெனி ஒன்றின் எஞ்சினீயரான ஈசுவர னுக்குக் கம்பெனியின் பிரதம எஞ்சினீயராக—வெகு சமீபத்தில் அயல் நாடுகளிலிருந்து திரும்பிய—சங்கரன் அங்கு வந்து சேர்ந்தபோது துவங்கிய அனுபவம் அது!

சங்கரன் மிகச் சிறந்த நிபுணர். 'அவரது திறமையை உள் நாடும், வெளி நாடுகளும் ஒருங்கே போற்றிப் பாராட்டின. ஆனால் சங்கரன் என்ற எஞ்சினீயரைவிட, சங்கரன் என்ற மனிதருடன் நெருங்கிப் பழகிய பாக்யம்—அல்லது துர்ப்பாக்கியம்—ஈசுவர னுக்குத்தான் வாய்த்தது! வெளி நாடுகளுக்கெல்லாம் போய் வந்த சங்கரன், தன் மனிதத் தன்மை, பண்பு, இவற்றையெல்லாம் கூட மறந்துபோய் வெளி நாட்டிலேயே விட்டு வந்து விட்டாரோ என்று சந்தேகப்படும் அளவுக்கு, அவரது நடவடிக்கை இருந்தது.

தன் சம நிலைக்குக் கீழ்ப் படியில் உள்ள எவனுமே உத்தியோகஸ்தன் அல்ல, தன் தயவில், தன் மேற்பார்வையில், வயிறு வளர்க்க வந்திருக்கும் ஒருவன், தான் பேசுவதை அல்லது ஏசுவதை அனுபவிக்கப் பிறந்தவன் என்ற போக்கே சங்கரனிடம் மேலோங்கி நின்றது.

அடங்கியே பேசி, பணிந்தே நடந்து, யாரையுமே எதிர்த்து ஒரு சொல் பேசாமலே வளர்ந்து விட்டவர் ஈசுவரன். ஏழைக் குடும்பத்தில் பிறந்து பணிவாலும், படிப்பாலும் முன்னேறிய அவர் வேறு எவ்விதமாகவும் இருந்திருக்க முடியாது. வயதால் பெரியவர், அனுவபத்தில் முதியவர் என்பதெல்லாம் 'திகுதி'யுடன் சேர்ந்த தாகுமா? சங்கரன் பேசுவதை யெல்லாம் கேட்டு, விழுங்கி ஜீரணித்துக் கொள்ளத்தானே ஈசுவரனுக்குச் சம்பளம் கொடுக் கிறார்கள்!

சங்கரன் அப்படித்தான் நினைத்தார்.

பல சிறந்த திட்டங்களுக்கு அஸ்திவார மூளையாக இருந்த சங்கரனுக்கு, தனது கர்வம் பிடித்த போக்குக்கும், வெறித் தனத் திற்கும் ஒரு சிறு அணை போடத் தெரியாமலிருந்தது விந்தைதான்!

★

"கூப்பிடய்யா அவரை!"

பல பலவென்று பொழுது விடியும் தருணம், மூன்றும் நாள் காலையில் சங்கரனின் குரல் அந்தப் பிரதேசத்தில் உக்கிரமாகக் கிளம்பி, பாறுங்கற்கள் குவித்திருந்த பகுதியிலும், எதிரே கல் விளக்கும் பகுதியில் இருக்கும் குன்றிலும் மோதி எதிரொலித்தது! பெரிய உத்தியோகஸ்தர்கள் நடுங்கிய நடுக்கத்தில், குட்டி

எஞ்சினீயர்களும், மேஸ்திரிகளும் 'சம்பளம் தருபவன் கம்பெனிக்காரன் தான்; சங்கரன் அல்ல' என்ற விஷயத்தையே நினைக்காமல் குதிகால் கீழே படாமல் ஓடினார்கள்! எப்படியாவது சங்கரன் கண் பார்வையில் படாமல், எங்கேயாவது ஓரிடத்தில் நின்று கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தில் அப்படி ஓடினார்களோ அல்லது உண்மையில் ஈசுவரனை அந்த இடத்துக்குச் கைப் பிடியாகப் பிடித்துக் கொண்டு வந்து நிறுத்தி விட வேண்டுமென்ற எண்ணத்தில் உயர்தர அதிகாரியின் திருப்தியைச் சம்பாதித்துக் கொண்டால் தான் பிழைப்பைக் காப்பாற்றிக் கொள்ளலாம் என்ற உணர்வில் ஓடினார்களோ! மூலைக் கொருவராக, காக்கைக் கூட்டத்தின் நடுவில் கல் விழுந்ததுபோல் சிதறிக் கலைந்து ஓடி விட்டனர் அத்தனை பேரும்.

முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கச் சுற்று முற்றும் பார்த்தார் சங்கரன். கோபம் கொந்தளித்தது அவர் பார்வையில்.

தாற்காலிகப் பாலம் கட்டி முடிக்கப்பட்டிருந்தது. குறுகிய கால அளவில் எவ்வளவு திறமையாகச் செய்ய முடியுமோ, அவ்வளவு திறமையுடன் கட்டப்பட்டிருந்தது அது என்பது அந்த நிபுணரின் கண்களுக்குப் புலப்படாமல் போகவில்லை. ஆனால் முதலிரண்டு நாட்களில் பெய்த பெரும் பேய் மழையின் காரணமாக, அந்த ஆற்றில் கரைபுரண்டு பெருகி வந்த வெள்ளத்தால், அங்கங்கே பாலத்துக்கு ஆதாரமாக நிறுத்தப்பட்டிருந்த தூண்கள் மட்டும் அரிக்கப்பட்டு, ஓரளவு பலகீனப்படுத்தப்பட்டிருந்தன. கரையிலிருந்தபடியே ஒரு காலைப் பாலத்தின் மீது வைத்துப் பார்த்த சங்கரன் ஏனோ பின் வாங்கினார்.

வேலையை முடித்து விட்டால் போதுமா? இந்த மழையில் செய்து முடித்த வேலை, எந்த நிலையில் இருக்கிறது என்று கவனித்துக் கொள்ள வேண்டாமா? வேலை முடிந்த பின் எக்கேடு கெட்டுப் போனாலும் போகட்டும் என்று இருந்து விடுவதா? அதுவும் பிரதம எஞ்சினீயரான அவர் பார்வையிட வரும்போது இருந்து பதில் சொல்ல வேண்டியவரல்லவா ஈசுவரன்? அதற்குக் கூட வரமுடியவில்லையா அவரால்?

இந்த எண்ணத்தின் விளைவில் புகைந்த ஆத்திரம்தான் சங்கரனின் குரலை உயர்த்திக் காட்டியது.

''ஈசுவரன் எங்கேய்யா?''

''பொறுப்பில்லாத மனுஷன்!''

''சீக்கிரம் கூப்பிடய்யா!''

கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார் சங்கரன்.

மூலைக்கொருவராக ஓடிய சிப்பந்திகள், ஒவ்வொருவராகத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். சீக்கிரமாக வந்து விட்டால்

'ஈசுவரன் வீட்டில் இல்லை' என்ற—கோபம் விளைவிக்கக் கூடிய—பதிலைச் சொல்லித் தீர வேண்டிய பெரும் பொறுப்பு விழும். பிழைப்பைக் கெடுத்துக்கொள்ள அவர்கள் எவருமே தயாரா யில்லையாதலால் தயங்கித் தயங்கி அடிமேலடி வைத்துப் பூமேல் நடப்பவர்கள்போல மெள்ள மெள்ள ஊர்ந்து வந்தார்கள்.

இது போதாதா சங்கரனின் ஆத்திரத்தைக் கிளப்பிவிட?

"எனக்குத் தெரியுமய்யா! வேலையை முடித்து விட்டோம் என்ற கர்வம்! நான் வந்து கேட்டு அவர் பதில் சொல்லக் கூடாதென்று ஏதோ ஒரு சாக்குச் சொல்லி ஓடி இருப்பார்! ஆள் அப்படிப் பட்டவர்தானே! எனக்கு அப்படித் தானய்யா தோன்றுகிறது!" என்று இரைந்தார்.

'ஈசுவரன் கடமையில் கருத்துள்ளவர். அப்படியெல்லாம் செய்யக் கூடியவரல்ல; நிச்சயமாகச் செய்ய மாட்டார்' என்பது அங்கிருந்த ஊழியர்கள் அத்தனை பேருக்கும் தெரியும். ஆனால் அதை வாய் விட்டுச் சங்கரனிடம் சொல்லக்கூடிய தைரியம் மட்டும் துரதிருஷ்ட வசமாக யாருக்குமே வரவில்லை. ஒரு முறை எச்சிலை விழுங்கி எல்லோரும் தம் நெஞ்சிலிருந்து வார்த்தையை உள்ளே தள்ளிவிட்டு ஜீரணித்துக் கொண்டார்கள். தவறி வெளியே வந்து விட்டால்........?

தம் கடமை என்ன என்று யோசிப்பவர் போல, சங்கரன் தொப்பியை ஒரு முறை கழற்றி, தலையை மெதுவாகத் தடவி விட்டுக் கொண்டார்.

''கொஞ்சம் முன் ஜாக்கிரதையுடன் கடமையைச் சரியாகச் செய்திருந்தால், இந்த வெள்ளம் பாலத்தைப் பாதித்திருக்காது. இத்தனை உதவாக்கரை ஆட்கள் இங்கே கூட்டம் போட்டுக் கொண்டு வேலை செய்து என்ன லாபம்? வேலையில் அக்கறை உள்ளவர்கள், வேலை கற்றுக் கொள்ள விரும்புபவர்கள், கடமையைச் சரியாக உணர்ந்து கொள்ள ஆசைப்படுபவர்கள் எல்லாம் என்னுடன் கீழே இறங்கி வரலாம். ஈசுவரனைப் போல ஒதுங்கி......சரி அது எதற்கு? வருபவர்கள் வரலாம்'' என்று பிரசங்க பாணியில் கூறி விட்டு, ஆற்றை நோக்கி நடந்தார் சங்கரன்.

தாற்காலிகப் பாலத்தின் பக்கத்தில், சங்கரன் உள்ளிட்ட நிபுணர்கள் நின்றிருந்த ஆற்றின் கரையில், ஆற்றின் மேட்டில் குவிக்கப் பட்டிருந்த பெரிய பெரிய பாறுங்கற்கள் மலைபோல் குவிந்து. தாறுமாறுக உருண்டு கிடந்தன. மெல்ல மெல்லக் கால்களை அவற்றின் மீது ஊன்றி வைத்தபடி சங்கரன் ஒவ்வொரு அடியாக ஆற்றுக்குள் இறங்கத் தொடங்கினர்.

மற்றவர்களோ மரண பயம் பின்னே இழுக்க, அதிகாரி பயம் முன்னே தள்ள, இரண்டடி முன்னும் இரண்டடி பின்னுமாக நகர்ந்து.

பின்னால் வருவது போலப் போக்குக் காட்டிச் சமாளித்தார்கள். உத்தியோக உயர்வை விரும்பிய வீரர்கள் சிலர் மட்டும், உயிரைத் திருணமாக மதித்து, சங்கரனைப் பின் தொடர்ந்தார்கள்.

"இப்போது நான் செய்யப் போகும் மேற்பார்வை வேலையை நேற்றே ஈசுவரன் செய்திருந்தால் சரியாக இருந்திருக்கும். மிஸ்டர் டிக்ருஸ்! ஒரு ஆளை அனுப்பி ஈசுவரன் 'குவாட்டர்ஸு'க்குத் திரும்பி வந்து விட்டாரா என்று பார்த்து வரச் சொல்லுங்கள். வந்திருந்தால் உடனே புறப்பட்டு இங்கே வரும்படி சொல்லி அனுப்புங்கள்" என்றார் சங்கரன், பாதி தூரத்தில் சென்று கொண்டிருந்தபோது.

டிக்ருஸ் கேசவனிடம் சொல்ல, கேசவன் மாதவனிடமும், மாதவன் மதுசூதனனிடமும் சொல்லி ஒலி பரப்பி, கடைசியில் கூலியாள் குப்புசாமி 'குவாட்டர்ஸு'க்கு ஓடினான் ஈசுவரனைக் கூட்டிவர.

உத்தரவு பிறப்பித்து விட்ட பெருமையுடன் அலட்சியமாகத் திரும்பினார் சங்கரன்.........

காலில் ஏதோ இடறித் தடுக்கி விட்டது.

அவர் காலை ஊன்றி இருந்த கல் தடம் புரள, அவர் நிலை தடுமாறிக் கீழே உருண்டு, தண்ணீர் மட்டம் வரையிலும் சென்று விட்டார். முகத்தில் தண்ணீர்த் திவலைகளும், வியர்வை முத்துக்களும் பளிச்சிட, நிலை தடுமாறி திடீரென்று விழுந்ததால் உண்டான பதற்றமும் நடுக்கமும் தெளிவாகாத நிலையில் சங்கரன் எழுந்து நின்று, "அங்கே! அதோ!" என்று ஒரு விரலால் சுட்டிக் காட்டிக் கூவினார்.

அங்கிருந்த அத்தனை ஜோடிக் கண்களும் அவர் காட்டிய திசையில் குறிப்பிட்ட இடத்தில் சென்று லயித்தன.

குடை ஒன்றின் வளைந்த பிடிதான் சங்கரனின் காலைத் தடுக்கியிருக்கிறது. யாரோ அல்லது ஏதுவோ காலைக் கவ்வி விட்டதாகத் தோன்றி யிருக்கிறது சங்கரனுக்கு. அதுதான் அத்தனை பதற்றம் அவருக்கு!

கூலியாட்கள் விடுவிடென்று இறங்கினார்கள். அந்தப் பாறைக் குவியலிலிருந்த பெரும் கற்களை ஒவ்வொன்றாக அப்புறப் படுத்தத் தொடங்கினார்கள். சங்கரன் நிலைக் குத்தியபடி பார்த்துக் கொண்டு நின்றார்.

குடைக் காம்பைச் சுற்றியிருந்த கற்கள் எல்லாம் நகர்த்தப் பட்டன. ஒரு குடை முழுவதும் தாறு மாறாகக் கிழிந்த நிலையில் அகப்பட்டது!

அதற்குக் கொஞ்சம் தள்ளி ஒரு டார்ச் விளக்கு!

அதற்கும் கொஞ்சம் தூரத்தில் சில வரை படங்களும் குறிப்புகளும்! அவற்றிற்கும் அப்பால்.........

மழைக் கோட்டால் மூடப்பட்டு உத்தியோக உடுப்பில் கிடந்தார் ஈசுவரன்! பாறைகளால் நசுக்கப்பட்டிருந்த அவரது முகம் தொப்பிக்குள் பயங்கரமாகக் காட்சி அளித்தது. கைப்பக்கத்தில் திறந்து கிடந்த நிலையில் பவுண்டன் பேனு. அளவுக் குறிப்புகள், மேலதிகாரியின் ஸ்தல உத்தரவுகள் எழுதப் பட்ட சிறிய குறிப்புப் புத்தகம் மழையில் ஊறிக் கிடந்தது. பையில் மறுநாள் மனைவிக்கு மருந்து வாங்க டவுனுக்குப் போய்வர அனுமதி கோரிக் கடிதம் ஒன்று இருந்தது.

சங்கரனுக்கு ஏனோ பேச வாய் எழவில்லை. பேச வேண்டுமென்றோ என்ன பேசுவதென்றோ தெரியவில்லை.

தூரத்தில் கூலியாள் குப்புசாமியுடன், ஈசுவரனின் எட்டு வயதுப் பையன் வந்து கொண்டிருந்தான்.

"அப்பா ராத்திரி மழை பெய்ய ஆரம்பித்தவுடனே கோட்டெல்லாம் போட்டுண்டு எங்கேயோ புறப்பட்டுப் போனு, இன்னும் வீட்டுக்கு வரவில்லை. வந்தவுடனே வரச்சொல்றேன்னு அம்மா சொல்லச் சொன்ன சார்" என்று சொல்லிக் கொண்டே வந்தான் பையன். அத்தனை உத்தியோகஸ்தர்களிடையே உரக்கப் பேசத் துணிவில்லை அவனுக்கு. சங்கரனுக்கு அப்போதுதான் உண்மை உதயமாகத் தொடங்கி யிருந்தது.

'வேலையை முடித்து விட்டு வீடு திரும்பிய ஈசுரவன், நல்ல மழை பிடித்துக் கொண்டவுடன் பாலம் என்னவாகி விடுமோ என்ற கவலையில் அதைக் கவனிப்பதற்காகக் கொட்டுகிற மழையில் மறுபடி இரவில் அந்த இடத்துக்கு வந்திருக்கிருர். தனக்கு நேர்ந்தது போல் கல்லோ எதுவோ அவரைக் கீழே உருட்டி விட்டது. அவரது கஷ்ட காலம், மேலும் பாறைகள் உருண்டு மேலே விழுந்து விட்டன. 'தன் கடமையைச் செய்யவில்லை' என்று அவரைச் சொன்னது எத்தனை பெரும் பாதகம்!'

அன்றுவரை பெருமூச்சு விட்டு அறியாத சங்கரன், நீண்டதொரு பெருமூச்சு விட்டார். அவர் கண்முன் கடமை வீரராக ஈசுவரன் காட்சி அளித்தது, கண்களில் கண்ணீரை வருவித்துத் திரையிட்டது. எத்தகைய கடமை தவருத ஊழியரை இழந்து விட்டோம் என்று எண்ணியபோது அவருக்கு அநீதி இழைத்து விட்டோமென்ற குறுகுறுப்புடன் துக்கம் பீரிட்டது. ஈசுவரனின் பையன் ஏதுமறியாமல் வெகுளியாகச் சொன்னதை எண்ண எண்ண, அக்குடும்பம் எந்த நிலையில் இருக்கிறதென்று நினைக்க நினைக்க, அவரது உள்ளத்தில் பொங்கிப் புரண்ட துக்கம் வெள்ளமெனப் பெருகியது.

எத்தனையோ திட்டமிட்டு அணைக்கட்டுகளை வெகு சிறப்பாகத் திறமையுடன் கட்டி முடித்த நிபுணர் சங்கரன் அந்த ஸ்தலத்தில் அந்தக் கணத்தில் தோல்வியைக் கண்டார். அவரது உள்ளத்தில் கொந்தளித்த வேதனைப் பெருக்குக்கும், சோக வெள்ளத்திற்கும், ஒரு அணை போட அவரால் முடியவில்லை.

# தூமகேது

*சீதாதேவி*

மதுரைக் கீழாவணி மூல வீதியில் ஒரு பெரிய வீடு. காஸ் விளக்குகளும் கொத்து விளக்குகளும் பந்தலில் நிலவை வாரி இறைக்கின்றன. கல்யாணப் பரபரப்பு நிறைந்து எங்கும் ஒரே கூட்டமாக இருக்கிறது. சிட்டுக்குருவிகள் போல் சிறுவர் சிறுமிகள் ஓடி விளையாடுகிறார்கள். பொன்னுசாமிப் பிள்ளை நாயனம் கர்ணமிருதமாக ஒலிக்கிறது. ஊர்வலத்துக்குப் புறப்பட்ட பெண்டுகள் கூட்டங் கூட்டமாக வந்து கூடினர். சந்தனம், புஷ்பம், சர்க்கரை முதலிய மங்கலப் பொருள்களைக் கூடத்தில் கொண்டுவந்து வைப்பதில் சிலர் முனைந்தனர்.

அன்று நான்காம் நாள் கல்யாணம். வக்கீல் குப்புசாமி ஐயர் என்ற குப்பண்ணு அவர்களின் ஒரே பெண் சரஸ்வதியைச் சிங்கா நல்லூர்ச் சுந்தரமையரின் ஏக புத்திரன் சுப்பு என்கிற சுப்பிரமணியனுக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுத்தார். பெண்ணுக்கு வயசு பதின்மூன்று; மாப்பிள்ளைக்கு வயசு பதினேழு.

சம்பந்தியம்மாள் மீனாட்சி சாட்சாத் லட்சுமிபோல் இருந்தாள். அவள் அணிந்திருந்த கடிகாரச் சங்கிலி, பெண்கள் எல்லாரையும் கவர்ந்தது. இருபது பவுன்! எடுத்த கை இற்றுப் போகும்போல் இருந்தது. இந்தக் காலத்துக்கு இது பழைய மோஸ்தர்தான், ஆனால் நாற்பது வருஷத்துக்கு முன் - இந்தச் சம்பவம் நடந்த காலத்தில் - அது புத்தப் புது மோஸ்தர்.

மற்ற எல்லாரும் வங்கி, காசுமாலை, கொடி என்று ஒரே பாணியில் நகை போட்டுக்கொண்டிருக்க, இவள் மட்டும் நேற்று வந்த புதிய தினுசுச் சங்கிலி அணிந்திருந்தது அங்கிருந்த பெண்டுகளுக்கெல்லாம் அவளிடத்தில் மதிப்பையும், அவளிடம் பேசத் தயக்கத்தையும் உண்டாக்கியது.

ஊர்வலத்துக்கு ஸாரட்டு வர நேரமாயிற்று. அவரவர்கள் மனம் போனபடி கூடிக் கூடிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஒரு மாதுளம் விதை அளவுள்ள எட்டுச் சிவப்புக் கல்லோடு, காவடி உட்பட இரண்டு பவுன் தங்கம் கொண்ட தோடு ஒன்று, காலணு அளவுள்ள காதுத் துளையிலிருந்து ஊசலாட, ஒரு பாட்டி மீனாட்சியினிடம் வந்து பேச்சுக் கொடுத்தாள். பிறகு, "என்ன, சம்பந்தியம்மா? நீங்கள் என்னவோ புதுச் சங்கிலி பண்ணிக்கொண்டிருக்கிறீர்களாம். எங்கள் வீட்டுப் பெண்களும் பேத்திகளும் நேற்றி

லிருந்து என்னைத் துளைக்கிறார்கள். அது மாதிரி அவர்களுக்குப் பண்ணிப் போடவேண்டுமாம். எங்கே சற்று அதைப் பார்க்கிறேன். இப்படிக் கையில் கொடுங்கள்'' என்று சொல்லி வாங்கிப் பார்த்தாள்.

''சங்கிலி அழகாகத்தான் இருக்கிறது. ஆனால் இந்தப் பவுனைச் சுமக்கவே இந்தக் காலத்துக் குட்டிகளுக்குத் திராணி இல்லையே! போதும், போதும்! என் நாட்டுப் பெண் போட்டுக்கொண்டிருக்கிறாள், பாருங்கள்! அந்தக் கொடி பதினைந்து பவுன்'' என்றாள்.

மீனாட்சி, ''ஏன் பாட்டி, ஒரு கொடிக்குப் பதினைந்து பவுன் போட்டால் கழுத்து நிறைந்திருக்கிறதா? இதுவானால் கழுத்து நிறைந்திருக்கிறது, பாருங்கள். போன வருஷம் பட்டணத்துக்குப் போயிருந்தபோது வாங்கிக்கொண்டு வந்தேன்'' என்றாள்.

''ஆமாம்; பட்டணத்திலேதான் தினத்துக்கு ஒரு நாகரிகம் மாறிக்கொண்டிருக்கிறதே! நீங்கள் சொன்னாற்போல, கொடி இது மாதிரி கழுத்து நிறைந்து இருக்காதுதான். ஜாக்கிரதையாகக் கழுத்திலே சங்கிலியைப் போட்டுக்கொள்ளுங்கள். ஜாக்கிரதை அம்மா, ஜாக்கிரதை! கொடி என்றதும் ஞாபகம் வருகிறது. என் நாட்டுப் பெண்ணுக்குப் பக்கத்தகத்துப் பெண் ஒரு நாழியிலே கழுத்துக் கொடியைத் தொலைத்துவிட்டு வந்து நின்றாள். அதுவும் இவளுடையது மாதிரி நாயுருவிக் கொடிதான்'' என்றாள் பாட்டி.

இதைக் கேட்டதும் மீனாட்சிக்குத் திக்கென்றது. ''பாட்டி, பதினைந்து பவுன் நகை கழன்று விழுந்ததுகூடத் தெரியாமல் இருக்குமா ஒருத்திக்கு? அவள் என்னத்தனை சமர்த்துப் போல் இருக்கிறது!'' என்றாள் மீனாட்சி.

''கொடி மட்டுமா? கொடியில் இரண்டு திருமங்கிலியம். கல்லுக் கல்லாக இரண்டு மோர்கராக்கள். ஆடி வெள்ளிக்கிழமையும் அதுவுமாக!''

இதற்கு மேல் மீனாட்சியால் கேட்க முடியவில்லை. தலை சுற்றியது. நெஞ்சில் சம்மட்டி கொண்டு அடிப்பதுபோல் இருந்தது. கழுத்துச் சங்கிலி, பாம்பாகப் படம் எடுத்து ஆடுவதுபோல் இருந்தது.

''பாட்டி, நல்ல நாளும் அதுவுமாக, கல்யாணப் பந்தலில் ஒன்றும் சொல்லாதீர்கள். கேட்கக் கேட்க எனக்கு மனசுக்குக் கஷ்டமாக இருக்கிறது. நாங்கள் இரண்டு பேரும். ஆளுக்கு ஒரு கருக்காயை வைத்துக்கொண்டு கல்யாணம் செய்கிறோம். எங்கேயாவது நன்றாக இருக்க வேண்டும்'' என்று சொல்லிவிட்டு, மீனாட்சி அங்கிருந்து நழுவினாள்.

அவள் பெயர் என்ன, எந்த ஊர் என்றெல்லாம் பாட்டியினிடம் கேட்க வேண்டும் என்று நாக்குத் துடித்தது. அப்படிக் கேட்பது உசிதமாக இருக்காது. திடீரென்று அதையெல்லாம் இவள் ஏன்

கேட்கிருள் என்று சந்தேகம் தோன்றலாம் என்ற எண்ணத்தால் கேட்காமல் விட்டுவிட்டாள்.

கல்யாணம், வழக்கப்படி ஐந்து நாள் திமிலோகப்பட்டது. கொஞ்சம் பசையுள்ள குடும்பத்துக் கல்யாணம் ஆனதால், நன்ருகச் சீர் வரிசைகள் செய்தார்கள்.

சம்பந்திகள் ஊருக்குப் புறப்படுவதற்கு முன், முதல் நாள் பேசிய பாட்டியைப் பார்த்து நமஸ்காரம் பண்ணிஞள், மீஞட்சி. பிறகு தயங்கிய குரலில், "பாட்டி, நேற்று நான் பேசியதைத் தப்பாக எடுத்துக் கொள்ளாதீர்கள். என்னவோ, மனசில் அஞ்ஞனம். பாவம்! நகையைத் தொலைத்த பெண் யார், என்ன என்று விசாரித்திருக்க வேண்டும். சட்டென்று நான் போய்விட்டது உங்களுக்கு வருத்தமாக இருக்கும் என்று அப்புறந்தான் தோன்றியது. உங்களைக் கண்டு மன்னிப்புக் கேட்டால் ஒழிய மனசு நிம்மதி அடையாது போல் இருந்தது. சொல்லிவிட்டேன். இனிமேல் நன்ருகத் தூக்கம் வரும்" என்று சொல்லிச் சிரித்தாள்.

பாட்டியின் உச்சி குளிர்ந்துவிட்டது. "அதனுல் என்ன? நானுந்தான் கல்யாணச் சமயத்தில் அந்தச் சங்கதியை உங்களிடம் சொல்லியிருக்க வேண்டாம். ஜாக்கிரதைக்காகச் சொன்னேன்" என்ருள்.

பக்கத்தில் இருந்த பாட்டியின் நாட்டுப் பெண் என்னவென்று விசாரித்தாள்.

"ஒன்றும் இல்லை; கல்லிடைக்குறிச்சிப் பாகீரதியின் கொடி போனதைப் பற்றிச் சொன்னேன்......"

நாட்டுப் பெண், "அதுவா? தனுஷ்கோடியில் நடந்த சமாச்சாரம் அல்லவா அது?" என்ருள்.

மீஞட்சி இதைக் கேட்டதும் நடுங்கிஞள். பேசச் சந்தர்ப்பம் கிடைத்தால் விடாத பாட்டி, "நகைதான் போச்சு; 'போன நகையைத் திருப்பிப் பண்ணிக்கொண்டு வந்தாலொழிய வீட்டு வாசற்படி ஏருதே!' என்று மாமியார் சொல்லிவிட்டாளாமே!" என்ருள்.

"அந்தக் கூட்டமே ஈவிரக்கமற்ற கூட்டம், என்னவோ, ராமேசுவரத்துக்குப் போன வேளை, மாணிக்கம் போல் ஒரு குழந்தை பிறந்து விட்டது. அகமுடையான் அம்மாக் கோண்டுவாஞலும் மனச்சாட்சிக்கும் உலகத்துக்கும் பயந்தவன். அம்மாவைச் சரிக்கட்டி, மனைவியை அழைத்துக்கொண்டு போய்விட்டான்" என்ருள் நாட்டுப் பெண்.

இதற்குள் வண்டி வந்துவிட்டதென்று அழைக்க ஆள் வந்தது. போய் வருகிறேன் என்று சொல்லி, மீஞட்சி போய்விட்டாள்.

## 2

பதினெட்டு வருஷங்களுக்கு முன் நடந்த செய்தி மீனாட்சியின் மனத்தில் திரைப்படம் போல் நகர்ந்தது. சிங்காரநல்லூரில் சுந்தரம் சாதாரண வரும்படி உள்ள ஒரு மிராசுதார். இருக்க வீடும் வருஷாந்தரச் சாப்பாட்டுக்கு நெல்லும் இருந்ததால் கஷ்டம் என்பது இல்லாமல் வாழ்க்கைச் சக்கரம் ஓடிக்கொண்டிருந்தது. கல்யாணம் ஆன சில மாதங்களுக்குள் பெற்றோர் காலமாகி விட்டதாலும், உடன்பிறந்தவர்கள் யாரும் இல்லாததாலும் 'நம் மனிதர்' என்று சொல்லிக் கொள்ள அவருக்கு யாரும் இருக்கவில்லை. தம் ஒன்றுவிட்ட அத்தையின் பெண் மீனாட்சியை அவர் கல்யாணம் செய்துகொண்டிருந்ததால், மீனாட்சியின் தாய் சகாயத்துக்காக அடிக்கடி இவர்களுடன் வந்து தங்குவது உண்டு.

லட்சுமி அம்மாள் குடும்ப விவகாரங்களில் கைதேர்ந்த புள்ளி. அக்கம் பக்கங்களில் கல்யாணமோ கார்த்திகையோ எது நடந்தாலும் அந்த அம்மாளின் யோசனையும் உதவியும் இல்லாமல் நடக்காது. நல்ல உபகாரி. ஆனால் தர்க்கம், கட்சி என்று வந்தால், தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று சாதிப்பதில் அவளுக்கு அவளே நிகர். பாக்கில் அகப்படும் கல்லைப் போலும் பானகத்தில் கிடக்கும் ஈர்க்குப் போலும் சில சமயம் இந்தக் குணம் அவளிடம் தோன்றி, பிறருக்குத் தொல்லை கொடுத்தாலும், மற்றக் குணங்களின் பெருமை அதற்கு மாற்றாக இருந்தது.

மீனாட்சி, தாயின் கைப்பொம்மை. அவளுக்குக் கணவனிடம், அன்பும் பயபக்தியும் இருந்தன. இந்த இரண்டு கரைகளுக்கிடையே அடங்கி ஓடும் ஆறாக இருந்தாள் அவள். கரைகளில் எதையும் உடைத்து அந்த ஆறு பெருகியதே இல்லை. தன் அபிப்பிராயம் என்று ஒன்று, அவளிடம் தனித்துத் தலைதூக்கியதே இல்லை. அப்படிநேர்ந்த சந்தர்ப்பங்களும் மிகக் குறைவே.

கல்யாணமாகி இரண்டு வருஷங்கள் வரையில் குழந்தைகள் பிறக்கவில்லை. அந்த வருஷம் ஆடி அமாவாசைக்குச் சேது ஸ்நானம் செய்துவர வேண்டுமென்று லட்சுமி அம்மாள் சொல்லிக்கொண்டிருந்தாள்.

வைகாசி மாதம் முதல் சுந்தரம் புதிதாக வியாபாரத்தில் இறங்கினார். வெல்லம் நல்ல லாபத்தைக் கொடுக்கும் என்ற உத்தேசத்தால், தாமே நேரில் இருந்து வியாபாரத்தைக் கவனிக்க வேண்டி வந்தது. ஆகையால் ராமேசுவர யாத்திரைக்கு அவர் போக முடியவில்லை.

எப்படியாவது பெண்ணையும் மாப்பிள்ளையையும் அந்த அமாவாசைக்கு ராமேசுவரம் அழைத்துப்போக வேண்டுமென்று லட்சுமியம்மாள் துடித்தாள். புறப்படக் குறிப்பிட்ட இரண்டு நாட்களுக்கு

முன்னதாகவே மாப்பிள்ளை வந்த சமயத்தில் பிரயாணத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தாள்.

மாப்பிள்ளை சம்மதம் கொடுத்துவிட்டார்.

"அப்படியானால் நீங்களும் மீனாட்சியும் புறப்படுகிறீர்களா? நான் எப்படியும் போகலாம் என்று இருக்கிறேன்" என்றாள் லட்சுமி அம்மாள்.

"போய் வாருங்கள், எனக்கு இப்பொழுது வரச் சரிப்படாது. மீனாட்சியை மட்டும் அழைத்துக்கொண்டு போங்கள்."

"மீனாட்சி மட்டும் வந்தால் என்ன பிரயோஜனம்? தம்பதிகளாகச் சேர்ந்து ஸ்நானம் செய்தால்தான் பலன் உண்டு."

"நீங்கள் நினைப்பது எனக்குப் புரிகிறது. நானும் மீனாட்சியும் இன்னும் கிழவர்கள் ஆகிவிடவில்லை. இன்னும் பத்து வருஷம் இப்படியே இருந்தால் ஜோடியாகப் போய் வருகிறோம்" என்று சிரித்தார் சுந்தரம்.

"சரிதான், போங்கள்! பேச்சு ரொம்ப நன்றாயிருக்கிறது!" என்று பொய்க் கோபம் காட்டினாள் மீனாட்சி.

"அப்படியானால் நான் மட்டும் புறப்படுகிறேன்" என்று முடித்து நழுவிவிட்டாள் லட்சுமி அம்மாள்.

"நாமும் போய்வரலாமே" என்று கெஞ்சினாள் மீனாட்சி.

"இதோ பார், மீனாட்சி, எனக்கு மூச்சுவிடக்கூடப் பேர் தில்லை. இந்தா, இந்தச் சவுக்கத்தை வைத்துக் கொண்டு ஸ்நானம் செய்."

"ஐய! இந்தச் சவுக்கம் ஸ்நானந்தான் செய்யும். என் கூடப் பேசி நடந்து வருமா? சாப்பிடுமா?"

"சரிதான். உனக்குப் பதினைந்து வயசிலேயே பாப்பா வேண்டுமென்று ஆசை வந்துவிட்டது. இல்லாவிட்டால் என்னை ஏன் இப்படி விடேன் தொடேனென்று வம்பு செய்கிறாய்?"

இதை அவர் சிரித்துக்கொண்டே சொன்னார்.

மீனாட்சியை வெட்கம் கவ்விக்கொண்டது. வெட்கம் எரிச்சலாக மாறியது. "அப்படியா சொல்லுகிறீர்கள்? சரி, நீங்கள் வரவேண்டாம். தனியாகவே போய்விட்டு வருகிறேன். ராமேசுவர ஸ்நானம் என்று பேர்தான். மதுரை மீனாட்சி கோயில், அழகர் கோயில், திருப்பரங்குன்றம் இவற்றையெல்லாம் நாம் எப்போது பார்ப்பது? அதற்காகச் சொன்னால் என்ன என்னவோ சொல்கிறீர்களே!"

"நான் ஒன்றும் குற்றமாகச் சொல்லவில்லை. இப்பொழுது எனக்கு வேலை அதிகம். நீ பார்த்துவிட்டு வா; அவ்வளவுதானே?" என்று சொல்லி வெளியே போய்விட்டார் சுந்தரம்.

# 3

தாயும் மகளுமாக ராமேசுவர யாத்திரை செய்ததன் பயனாக ஒரு வருஷத்துக்குள்ளே சுப்பு பிறந்தான். அவன் பிறந்த வேளை நல்ல வேளை. சுந்தரம் தொட்டதெல்லாம் தங்கமாயிற்று.

வருஷங்கள் பதினேழு உருண்டோடிவிட்டன. சுப்பு காலேஜில் முதல் வருஷம் பி. ஏ. படித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது தான் மதுரை வக்கீல் குப்புசாமியும், வியாபார நிமித்தமாக மதுரைக் குப் போன சுந்தரமும் சந்தித்தார்கள். அவர்கள் பழக்கம் நீடித் தது. படிப்பாளியான மாப்பிள்ளையை விரும்பிய குப்புசாமி ஐயர், தம் பெண் சரஸ்வதியைச் சுப்புவுக்குக் கொடுத்துக் கல்யாணம் செய்தார்.

ஏழெட்டு மாதங்கள் சந்தோஷமாக ஓடின. 'மீனாட்சிக்கும் பிள்ளை பிறந்த வேளை பெருமையைத் தேடித் தந்தது; நாட்டுப்பெண் கால்வைத்த வேளை கஷ்டத்தின்மேல் கஷ்டமாக வருகிறது' என்று ஊரார் பேசிக்கொள்ளும்படி பல சந்தர்ப்பங்கள் நேர்ந்தன.

திடீரென்று லக்ஷ்மி அம்மாள் மூன்றே நாள் ஜுரமாகப் படுத்து இறந்தாள். வீட்டுப் பொறுப்பும் அநுபவமும் நிறைந்து, பெரிய துணையாக இருந்த தாயை இழந்த மீனாட்சி, இறகொடிந்த பட்சி யாகிவிட்டாள்.

சுப்புவுக்குப் பி. ஏ. இரண்டாம் வருஷம் தொடங்கியது. பெற் றோர் கீறிய கோட்டைத் தாண்டாத சாதுப்பிள்ளையாக இருந்த சுப்பு, இப்பொழுதெல்லாம் தன் மனம் போனபடி அலையத் தொடங்கிவிட்டான். இரவு எட்டு மணிக்கும் ஒன்பது மணிக்குத் தான் வீட்டுக்கு வருவான்.

ஒரு நாள் வியாபார விஷயமாக வெளியூர் போய் வந்த சுந்தரம் வாட்டத்துடன் உள்ளே நுழைந்தார். எப்பொழுதும் மீனு மீனு என்று பலக்கக் கூப்பிட்டுக் கொண்டே உள்ளே வரும் சுபாவம் உள்ள அவர், வந்த சுவடு தெரியாமல் மாடிக்குப் போய்விட்டது, அவளுக்குக் குழப்பத்தை உண்டாக்கியது. கையில் பலகாரமும் தீர்த்தமும் எடுத்துக்கொண்டு மாடிக்குப் போனாள். ஒருக்களித் துப் படுத்திருந்த அவர் இவளைக் கண்டதும் கைகளால் முகத்தை மறைத்துக்கொண்டார்.

"ஐயோ, இதென்ன, விளையாடுகிறீர்களா அல்லது கோபமா?" என்று அவர் கையை விலக்கினாள் மீனாட்சி. அவர் முகம் பேயறைந் ததுபோல் இருந்தது. இவள் பேச்சைக் கேட்டதும் கோபமாக மாறியது.

"ஆம், விளையாட்டுத்தான். அழகான பிள்ளையைப் பெற்று விட்டு, விளையாடத்தான் வேண்டும்; வயிறு கொதிக்கிறது! மானம்

புரிபோய்விட்டது. நம் நிலைக்கு மீறிய சம்பந்தம் வேறு செய்து விட்டேன். அந்த மனிதர் காதில் சங்கதி எட்டினால் நான் எப்படிப் பொறுப்பேன்? பச்சைக் கிளி போன்ற நாட்டுப் பெண் இன்னும் வீட்டுக்கே வரவில்லை. இப்பொழுது உன் பிள்ளையாண்டான் பழகாத கெட்ட பழக்கம் ஒன்று இல்லை.''

அவர் மேலே சொல்வதற்குள் மீனாட்சி தடுத்து, ''ஐயோ! நம் சுப்புவா இப்படிச் செய்கிறவன்? யாரேனும் வயிற்றெரிச்சலுக்குக் கிளப்பி விட்டிருப்பார்கள்'' என்றாள்.

''சட், வாயை மூடு! ஆறு மாத காலமாக அவன் வீட்டுக்கு வரும் நேரத்தைக் கவனிக்கிறாயா? உனக்கு எங்கே பிள்ளையைத் திருத்தத் தைரியம் வரப்போகிறது? கோயம்புத்தூரில் அவனுக்குத் துஷ்டக் கூட்டாளிகள் பலர் சேர்ந்துவிட்டார்கள். பணத்தைத் தண்ணீர் போலச் செலவழிக்கிறான். இன்று ரெயிலில் வரும்போது அவனைப்பற்றி இரண்டு பெரிய மனிதர்கள் பேசிக்கொண்டு போனதை என் காதாலேயே கேட்டேன். இல்லாவிட்டால் நானும் நம்பமாட்டேன். 'இந்தப் பூனையும் இந்தப் பாலைக் குடிக்குமா?' என்பதுபோல் நம்மிடம் நடந்துகொள்கிறான். நான் செய்த பாவம்!''

மீனாட்சி இத்தனை நேரம் துக்கத்தை அடக்கி வைத்திருந்தவள், குழந்தைபோல் அழுதுவிட்டாள். சுந்தரத்தின் கால்களைப் பிடித்துக் கொண்டு, ''எப்படியாவது அவனை இந்தப் படுகுழியிலிருந்து மீட்க முயல்வோம். நீங்களே இப்படித் தளர்ந்துவிட்டால் நான் எப்படிப் பொறுப்பேன்?'' என்று அவரைத் தேற்றப் பார்த்தாள்.

## 4

அன்று இரவு வீட்டுக்கு வந்த சுப்பு பெற்றோரின் சோகத்தைக் கண்டு திடுக்கிட்டான். 'எப்படியோ இவர்களுக்குச் செய்தி எட்டி விட்டது' என்பதைப் புரிந்துகொண்டான். சுபாவத்தில் தைரியம் இல்லாதவன் ஆகையால் வரப்போகும் புயலை எப்படிச் சமாளிப்பதென்று கவலைப்பட்டான்.

கடைசியில் துணிந்து கேட்டவள் மீனாட்சிதான். ''ஏண்டா சுப்பு, ஊரில் உன்னைப்பற்றி ஏதேதோ புகார் சொல்லுகிறார்களே, அவையெல்லாம் நிஜந்தானடா? நாங்கள் உன்னை மார்பிலும் தோளிலும் அருமையாகச் சுமந்து வளர்த்ததற்கு இதுதானா பலன்! அப்பாவுக்கு நீ ஒழுங்காக இருக்கிறாய் என்பது தெரியாவிட்டால், அவர் உயிரையே விட்டுவிடுவார். அவர் பக்கத்தில் உட்கார்ந்து, சமாதானமாக ஒரு வார்த்தை சொல்லடா'' என்று பொரிந்து தள்ளி விட்டாள்.

அவளுடைய இந்த எதிர்ப்பு, மின்னலும் இடியும் சேர்ந்த மழை போல் சுப்புவின் மனத்தைத் தாக்கியது. ''அம்மா, நான் தப்பு வழியில் போகமாட்டேன், அம்மா. ஏதோ டிராமா, சர்க்கஸ் என்று

சிநேகிதர்களுடன் போனால் யாரோ கதை கட்டிவிட்டிருக்கிறார்கள். இனிமேல் பார், தினந்தோறும் நான் சீக்கிரம் வீட்டுக்கு வந்துவிடுகிறேன்'' என்று சொல்லிவிட்டுத் தகப்பனாரைப் பார்க்கப் போனான்.

அவரை நிலைகுலைந்த கோலத்தில் பார்த்ததும் அவனுக்கு அழுகை பீரிட்டுக்கொண்டு வந்தது. அவர் மடியில் முகத்தைப் புதைத்துக்கொண்டு, "அப்பா, அப்பா, நான் தெரியாத்தனமாகத் தவறு செய்துவிட்டேன். இனிமேல் தப்புத் தண்டாவுக்கே போக மாட்டேன்'' என்று அழுதான்.

சுந்தரம் சற்றுத் தெளிந்தாற்போல் காணப்பட்டார். 'அழுகிற ஆளையும் சிரிக்கிற பெண்ணையும் நம்பாதே' என்கிறது பழமொழி. அது பொய்யாகுமா? பி. ஏ. பரீட்சையில் சுப்பு கோட்டை விட்டு விட்டான். பழைய நண்பர்களின் தொடர்பு மறுபடியும் உறுதியாகப் பிடித்துக் கொண்டது. இப்பொழுது அவன் வீட்டுக்கு இரவு நேரம் முழுவதுமே ஒவ்வொரு நாள் வரமாட்டான்.

சுந்தரம் அவமானத்தாலும் ஏக்கத்தாலும் குன்றிப் போய்விட்டார். மதுரைக்குத் தந்தி கொடுத்துச் சம்பந்தியைத் தருவித்தார். குப்புசாமி ஐயர் வந்தார். அவரைக் கண்டதும் சுந்தரம் ஹோவென்று கதறி விட்டார். "அத்தி பூத்தாற்போல் ஒரு பிள்ளை, லட்ச ரூபாய் மதிப்புள்ள சொத்தைப் பொறுப்புடன் கட்டியாளத் தகுந்தவன், அறிவாளி என்றெல்லாம் மனக்கோட்டை கட்டினேன், குப்பண்ணா, என் எண்ணத்தில் மண் விழுந்தது. உமது குடும்பத்துக்கும் தாங்க முடியாத துக்கம். நான் என்ன செய்வேன்!'' என்று புலம்பினார்.

குப்பண்ணா மலைபோன்ற உறுதி உடையவர். "மனத்தை அலட்டிக்கொள்ளாதீர்கள். உலகத்தில் இதெல்லாம் சகஜம். நம் சுப்பு மறுபடி திருந்தக்கூடாதா? நாம் பதற்றப்படாமல் நிதானமாக இருந்து திருத்திவிடலாம், தைரியமாக இருங்கள்'' என்று சமாதானம் சொல்லிவிட்டுப் போனார்.

ஐந்தாறு மாதங்கள் ஓடிவிட்டன. சுந்தரம் பாயோடு படுத்து விட்டார். பிள்ளையின் குணம் திருந்தாது என்ற கவலையால் அவரை இருதய நோய் பற்றிக்கொண்டது. திடீரென்று ஒரு நாள் உயிரை விட்டார். சுந்தரத்துக்கு உடம்பு ஜாஸ்தியாக இருந்தபோதுகூடப் பிள்ளையாண்டான் வீட்டில் இல்லை. அவனைத் தேடிப் பிடிக்க ஆள் அனுப்ப வேண்டியிருந்தது.

ஈமக்கடன்கள் முடிந்தபின் சொத்துக்களின் நிலவரத்தைப் பார்வையிட்டார் சம்பந்தி. ஆறு மாதத்துக்குள் இருபத்தையாயிரம் ரொக்கமாகச் சுப்புவால் கரைந்திருந்தது.

சுந்தரம் சாகுமுன் குப்பண்ணாவும் சுந்தரமும் சேர்ந்து, மிகுந்த குடும்பச் சொத்துக்களை அவன் விற்கவோ கடன் வாங்கவோ முடியாதபடி மீனாட்சியின் பேரில் எழுதி வைத்திருந்தார்கள்.

வெல்லம் இல்லாத இடத்தில் ஈக்களுக்கு வேலை ஏது? புதிய நண்பர்கள் சுப்புவை விட்டு விலகினார்கள். சுப்புவும் மீனாட்சியும் கொஞ்ச காலம் ஊரைவிட்டே விலகியிருப்பது நன்மை என்று நினைத்த குப்பண்ணா, அவர்களை மதுரைக்கு அழைத்துப் போனார்.

மீனாட்சிக்கு எதுவுமே பிடிக்கவில்லை. அவள் உடல் நாளுக்கு நாள் மெலிந்து வந்தது. அவளுக்கு இனிப் பிழைப்போம் என்ற நம்பிக்கை இல்லை. குப்பண்ணாவிடம் பேச்சுவாக்கில் தான் அடுத்த வாரம் சிங்காநல்லூருக்குப் புறப்படப் போவதாகச் சொன்னாள். அவர் அவளைத் தடுத்துப் பார்த்தார். அவள் சம்மதிக்கவில்லை. பிறகு பெண் சரஸ்வதியையும் மாப்பிள்ளையையும் சேர்த்து ஊருக்கு அனுப்பி வைத்தார்.

## 5

சரஸ்வதி மிக நல்ல பெண். சுபாவத்திலேயே அன்பும் அடக்கமும் நிறைந்த அவள், தன் மாமியாருடைய மன நிலைக்கு மிகவும் இரங்கி, அவள் மனம் கோணாமல் நடந்து வந்தாள். மீனாட்சியின் விடிவில்லாத கஷ்டத்துக்கு அவள் விடிவெள்ளிபோல் அமைந்தாள். மீனாட்சி சரஸ்வதியைப் பார்த்துச் சில சமயங்களில், "அம்மா, நீ சிறு பெண். என் கஷ்டத்தை நீக்கிவிடலாமென்று நினைக்கிறாய். நான் மகா பாவி. என்னைப்பற்றி நினைக்காதே. உன் அகமுடையானுக்கு வேண்டியதைச் செய். காலேஜில் அவன் முதல் மூன்று வருஷம் படித்த மாதிரியில் ஐ. ஸி. எஸ்.ஸுக்குக் கூட அவனை அனுப்ப நினைத்தோம். நம் அதிருஷ்டந்தான், அவன் புத்தி குறுக்கே பாய்ந்தது. வெறும் பி. ஏ. என்ற வாலைக்கூட ஒட்டிக் கொள்ள முடியாமல் போய்விட்டது. படிப்புப் போனால் போகிறது. இருப்பதை வைத்துக் கொண்டு நாலு தலைமுறைக்குத் தள்ளலாம். ஆனால் வேலையில்லாத அவன் இள மனசு என்னென்ன எண்ணமெல்லாம் எண்ணி, எப்படி வருந்துகிறதோ! நீ மட்டும் அவன் மனம் நோகும்படி ஒன்றும் சொல்லாதே. நீங்கள் இருவரு மாவது சந்தோஷமாக இருந்தால்தான் என் குடும்பம் விளங்கும்" என்று அடிக்கடி சொல்வாள்.

சரஸ்வதி, "சரி, சரி" என்று கேட்பாள். அவளுக்கு ஒன்றும் சரியாகப் புரியாது. அவள் கணவன் முன்போல் ஊதாரியாகத் திரிந்து ஊர் சுற்றவில்லை. தகப்பனார் இறந்து, தாய் சோகமே உருவாக மெலிந்து உருகுவதைக் கண்டதும் அவன் அடியோடு மாறிவிட்டான். சரஸ்வதியின் ஏக்கம் தேங்கிய விழிகள் அவனைப் புனிதமாக்கிவிட்டன. வீண் பொழுது போக்குவதுதான் அவனால் சகிக்க முடியாமல் இருந்தது. அவன் மனசுக்கு ஓயாத வேலை கொடுக்க, மற்றொரு துன்பத் தொடர் சூழ்ந்தது.

மீனாட்சியின் உடம்பு இளைத்ததோடு இருமலும் ஆரம்பித்தது. அவள் வைத்தியம் செய்துகொள்ள மறுத்துவிட்டாள். "நான் செய்த பாவத்தை நானே அநுபவித்துவிடுகிறேன். அதற்கு மாற்றுத் தேட வேண்டாம்" என்று சொல்லி வந்து, கடைசியில் படுத்த படுக்கையாகி விட்டாள்.

சரஸ்வதிக்குத் திகில் பிடித்துக் கொண்டது. சுப்புவிடம் சொல்லி டாக்டரைத் தருவித்து, மாமியாரைப் பரீட்சிக்கச்செய்தாள். டாக்டர் உள்ளே நுழைந்ததுமே மீனாட்சியின் உடம்பைக் கண்டு பிரமித்து நின்று விட்டார். பரீட்சித்துவிட்டு, ஏதேதோ மருந்து சொன்னார். வெளியே போகும்போது, சுப்புவை அழைத்துக் கொண்டு போய், "உங்கள் தாயாருக்கு க்ஷயம் வந்து முற்றிவிட்டது. அதோடு இருதயமும் பலவீனமாக இருக்கிறது. ஏதோ மனநோய் பிடிப்பதால்தான், அபாயமான நிலைக்கு உடல் வந்துவிட்டது" என்று சொன்னார்.

சுப்பு பேசவே இல்லை. கற்சிலை போல் நின்று விட்டான். அவன் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. டாக்டர் அநுதாபத்துடன், "கவலைப்படாதீர்கள். அந்த அம்மாள் மனசில் இருப்பதை அறிந்து, கவலையை நீக்கினால் ஒரு வேளை குணமாகலாம்" என்றார்.

"நான் செய்த பாவம்!" என்று அவன் வாய் முணுமுணுத்தது.

டாக்டர் சொன்ன மருந்துகளை வாங்கவே விடவில்லை மீனாட்சி. "அம்மா, நான் சிறு பிள்ளைத்தனமாக ஏதோ தவறி நடந்து விட்டேன். அதற்காக நீ உன்னையும் வருத்திக் கொண்டு என்னையும் வருத்துகிறாய். பாட்டியும் அப்பாவும் போன துக்கம் தீருமுன் நீயும் எங்களை நிராதரவாக விட்டுப் போனால் நாங்கள் தாங்குவது எப்படி? நான் இப்பொழுது ஒழுங்காக இருக்கவில்லையா? மருந்து சாப்பிட்டு உடம்பைத் தேற்றிக்கொள்" என்று சுப்பு கெஞ்சினான்.

"இனிமேல் மருந்து எதற்கப்பா?" என்று மழுப்பினாள் மீனாட்சி.

ஒருநாள் விடியற்காலை ஐந்து மணி இருக்கும். சிரமப்பட்டு இருமிய மீனாட்சி, ரத்தம் கக்கினாள். சுப்புவைப் பக்கத்தில் அழைத்தாள். "அப்பா குழந்தை, நான் இனிப் பிழைக்க மாட்டேன். இந்தா, அழாதே. நான் சொல்வதைக் கவனமாகக் கேள். அதற்குப் பரிகாரம் தேடினால்தான் நம் குடும்பம் சீர்ப்படும்; என் ஆத்மா சாந்தி அடையும். இதோ பெட்டி, கவர். நான் போன பிறகு இந்தக் கவரில் இருக்கும் கடிதத்தை நீ படித்துவிட்டு, அதில் காணப்படும் பாகீரதியைப் பற்றிக் கல்லிடைக்குறிச்சியில் விசாரி. அவளை நீ எப்படியாவது கண்டு பிடித்து, அவளிடம் கடிதத்தையும் பெட்டியையும் சேர்த்து விடு" என்று சொல்லி ஒரு கவரையும் பெட்டியையும் அவனிடம் கொடுத்தாள். பிறகு சரஸ்வதியையும் அழைத்துப் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டாள். "நான் செய்த பாவம்; நான் உள்ள

வரையில் உங்களுக்குக் குழந்தைகள் பிறக்கவில்லை. நான் அளவுக்கு மேல் கஷ்டத்தை அநுபவித்து விட்டேன். கவலைப்படாதீர்கள். நீங்கள் ஆயிரம் காலம் குழந்தை குட்டிகளோடு சௌக்கியமாக இருப்பீர்கள்'' என்று ஆசீர்வதித்தாள். "அம்பிகே, அம்பிகே" என்ற தியானத்தோடு அவள் உயிர் பிரிந்தது.

## 6

ஆடி மாதம்; வெள்ளிக்கிழமை. ராமேசுவரம் கோயிலில் உத்ஸவம் நடக்கிறது. ராமேசுவரம் புதுத் தெருவில் ஒரு சத்திரம். அதன் ஒரு பகுதியில் இறங்கியிருந்த டாக்டர் ராமநாதனை ஓர் ஆசாமி தேடி வந்தான். டாக்டர் அவனை வரவேற்று, உட்கார வைத்தார்.

"உங்களுக்கு என்ன வேண்டும்? நீங்கள் யார்?" என்று டாக்டர் கேட்டார்.

"சற்றுத் தனியாகப் பேச முடியுமா?" என்றான் புது ஆசாமி.

"அதற்கென்ன? இங்கேயே பேசலாம். என் தாயார்தான் இவர்கள். சங்கோசமில்லாமல் சொல்லுங்கள்."

முதலில் சற்றுத் தயங்கிய புதியவன் பிறகு தைரியப்படுத்திக் கொண்டு, ''நான் இருப்பது கோயம்புத்தூருக்குப் பக்கத்திலுள்ள சிங்காநல்லூர். என் பெயர் சுப்பிரமணியம். நானும் என் மனைவியும் உங்கள் தாயாரைத்தான் தேடி வந்தோம். பழக்கம் இல்லாத ஒரு மனிதர் உங்களைத் தேடி வந்து அடைக்கலம் புகுந்தால் காப்பாற்றுவீர்களா? முன்பின் தெரியாத என்னை வரவேற்றுப் பேச அநுமதித்த உங்களிடம் விஷயத்தைச் சொல்லவே நா எழவில்லை. இந்தக் கடிதம்.........'' என்றான்.

"ஒன்றும் புரியவில்லையே! இப்படிக் கொடும், உட்காரும்" என்று சொன்ன டாக்டர் அந்தக் கடிதத்தை வாங்கிப் பிரித்தார். கடிதத்தில் அவருடைய தாயின் பெயர் இருந்தது. கவரைத் திருப்பிப் பார்த்தார். அதன் மேலும் அவள் பெயரே இருந்தது.

"அம்மா" என்று கூப்பிட்டு, "இது உனக்கு எழுதிய கடிதம். இந்தா அம்மா" என்றார் டாக்டர்.

"நீதான் படியேண்டா கேட்கிறேன்" என்றாள் அம்மா.

டாக்டர் கடிதத்தைப் படித்தார் :

சிங்காநல்லூர்
24 - ஜூன், 1954

சகோதரி பாகீரதிக்கு நமஸ்காரம். நான் யார், ஏன் உனக்கு இந்தக் கடிதம் எழுதுகிறேன் என்பவை படிக்கப் படிக்கத் தெரியும்.

இருபத்தாறு வருஷங்களுக்குமுன் தனுஷ்கோடிக்கு ஆடி அமாவாசை ஸ்நானத்துக்கு வந்தது உனக்கு நினைவு இருக்கிறதா? நினைவில்லாமல் எப்படி மறக்கும்! எனக்கு அந்த நினைவு அப்பொழுது அதிகமாக இல்லை. சென்ற ஏழெட்டு வருஷங்களுக்குள் அந்தச் சம்பவத்தை நெருப்புத் துண்டத்தைக் கொண்டு என் நெஞ்சில் எழுதி விட்டது விதி. ஆடி அமாவாசை, வெள்ளிக் கிழமையுங்கூட! விடியற்காலை. தனுஷ்கோடியில் ஸ்நான கட்டத்துக்கு நானும் என் தாயும் வந்து கொண்டிருந்தோம். உம், எப்படி எழுதுவேன்! எழுதாவிட்டால் என் மனம் சாந்தி அடையாது. என் காலில் ஏதோ கனமான பொருள் தட்டுப்பட்டது. குனிந்து எடுத்தேன். திருமங்கல்யமும் மோகராக்களும் கோத்த நாயுருவிக் கொடி. அன்று அந்த விநாடியில் அது நெருப்பாகத்தான் என் கண்ணுக்குப் பட்டது.

"அம்மா!" என்றேன். பிரமிப்பால் பேச்சு வரவில்லை. என் தாய் மிக மிகச் சூட்சும புத்தி உள்ளவள். உடனே அதைப் பார்த்தாள். அப்படியே அதைக் கையில் இருந்த சவுக்கத்தில் சுற்றி வைத்துக்கொண்டு, "பேசாதே" என்று ஜாடை காட்டினுள்.

எங்களைத் தாண்டிக்கொண்டு வட நாட்டுக் கோசாயிக்கூட்டம் ஒன்று போயிற்று. "யாருடையதோ? பாவம்!" என்றேன்.

என் தாய், "யாரோ ஆயிரம் பேர்! சந்தையில் கிடைத்த பொருளை எல்லாருமே 'என்னுடையது' என்றுதான் சொல்லுவார்கள். உடைமைக்காரியை நீ தேடிப் பிடிக்கப் போகிருயா? நாம் ஒருவர் வீட்டில் கன்னம் வைக்கவில்லை; தானுகக் காலில் தட்டுப்பட்டது. 'வலிய வந்த சீதேவியை' வெள்ளிக்கிழமையும் தானுமாக உதறித் தள்ளாதே; வாயை மூடிக்கொண்டிரு" என்று என்னை அடக்கி விட்டாள்.

ஸ்நானம் நூற்றெட்டு முடிந்து திரும்பும் வரையில் கொடி நழுவியதை நீ கவனிக்கவில்லையாம். அதற்குள் நாங்கள் சாதாரணமாக ஸ்நானத்தை முடித்துக்கொண்டு திரும்பி விட்டோம்.

சமுத்திரக் கரையில் உன் மாமியாரும் கணவனும் உன்னை வாயில் வந்தபடி வைதார்களாம். கரையெல்லாம் சல்லடை போட்டுச் சலித்தார்களாம். இருந்தால்தானே அகப்படும்? நகையையும் பறி கொடுத்து, மாமியாரிடமும் கணவனிடமும் வசவு வாங்கிக் கொண்டு தவித்த அப்பாவியாகிய உன்னைக் கண்டு இரங்கிய சிலர், உனக்குப் பின்னுல் நாங்கள்தாம் வந்தோம் என்று சொன்னதால் நாங்கள் இறங்கியிருந்த சத்திரத்துக்கு நீயும் உன் கணவனும் மாமியாரும் வந்து எங்களிடம், "கொடியைப் பார்த்தீர்களா?" என்று சம்பிரதாயமாகக் கேட்டுவிட்டு, "நீங்கள்தாம் எங்களை அடுத்து வந்தீர்கள். தயவு செய்து கொடுத்து விடுங்கள்" என்று கேட்டீர்கள்.

மாமியாருக்குப் பின் கண்ணீரும் கம்பலையுமாக நின்ற நீ, "ஆடி வெள்ளிக்கிழமை; ஒரு திருமங்கல்யத்தையாவது கொடுத்து விடுங்கள்!" என்று பரிதாபமாகக் கேட்டாய்.

உன் முகத்தில் தோன்றிய சோகம், "உள்ளதைச் சொல்லிவிட வேண்டும். கொடுத்துவிட வேண்டும்" என்று என்னைத் தூண்டியது. என் உள்ளம் தவித்தது.

ஆனால் அம்மா அதற்குள் பெட்டி பேழை எல்லாவற்றையும் உதறிக் காட்டி விட்டாள். எனக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. எங்கும் கொடி இல்லை. நீங்கள் போய் விட்டீர்கள். இல்லை என்று பின் அதைச் சாதிப்பதையே நோக்கமாகக் கொண்ட அம்மா, பழைய தலையணையைத் துளைத்து அதை அதில் செருகியிருந்தாள். தையல்கூடப் போடவில்லை. ஊருக்கு வந்தபின் அதை எடுத்து அவள் காண்பித்தபோதுதான் எனக்கு விஷயம் தெரிந்தது.

நான் என்ன என்னவோ சொன்னேன். "போடி, கொடுத்தால் உடனே கூப்பிட்டுக் கொடுத்திருக்க வேண்டும். இனிமேல் சொன்னால் சிறைவாசந்தான் கிடைக்கும்" என்றாள். உடனே நான் கம்மென்று இருந்துவிட்டேன்.

நாளடைவில் அதை ஒரு வகையாக மறந்தே விட்டேன்? அல்லது மறந்ததாகப் பாவித்தேன். ஊரார் பொருள் தூமகேது என்பதை நான் அநுபவத்தில் அறிந்தேன். உன் நகையைத் தயவு செய்து பெற்றுக்கொள். அதைப் பழைய உருவில் கொடியாகவே வைத்திருக்கிறேன். அதை அழித்துச் சங்கிலியாகப் பண்ணி, நான் கழுத்தில் அணிந்தது முதல் என் குடியையே அது பழி வாங்கி விட்டது!

நான் பதினைந்து வயசு அறியாச் சிறுமியாக இருந்தபோது செய்த குற்றத்தைப் பெரிய மனசு செய்து, நான் பட்ட கஷ்டங்களுக்கு இரங்கியாவது மன்னித்துவிடு. என் ஒரே குழந்தையாகிய இவனுக்கு உன் ஆசீர்வாதந்தான் வாழ்வு தர வேண்டும்.

உன் மன்னிப்பைக் கோரும், மீனாட்சி.

இதை டாக்டர் ராமநாதன் படித்தபோது, வைத்த கண் வாங்காமல் திறந்த வாய் திறந்தபடியே அவர் தாய் பாகீரதி நின்றவள் நின்றவள்தான்! கடிதத்தைப் படித்து முடித்ததும் ஒரு நீண்ட பெருமூச்சு அவளிடமிருந்து வெளிவந்தது. கண்களில் நீர் நிறைந்து வழிந்தது. கண்ணீர் வழியச் சோகமே உருவாக உட்கார்ந்திருந்த சுப்பு, திடீரென்று எழுந்து பாகீரதியம்மாளின் காலில் விழுந்து அவள் காலை இறுகப் பிடித்துக்கொண்டு கேவு கேவென்று கேவினான். ஒன்றும் புரியாமல் குழம்பிய ராமநாதன் அவர்கள் இருவரையும் பார்த்தவண்ணம் பேச்சற்று நின்றிருந்தார்.

சற்று நேரத்திற்குப் பின் முதலில் தெளிவு பெற்ற பாகீரதி சரேலென்று சுப்புவை வாத்ஸல்யத்தோடு தோளைப் பிடித்து எழுப்பினாள். "அப்பா, குழந்தை, எழுந்திரு. நடந்தது நடந்து விட்டது. அதுபோன ஆரம்பத்தில் நான் எவ்வளவோ கஷ்டப்பட்டாலும், பின்னால் தெய்வம் எனக்கு ஒரு குறையும் வைக்கவில்லை. பாவம்! உன் தாய் மீனாட்சி நிரபராதி. அவள் அம்மாவை மீறி என்ன செய்ய முடியும்? ஒன்றுக்கும் கவலைப்படாதே, அப்பா. இவ்வளவு நல்ல மனுஷியான மீனாட்சி பட்ட கஷ்டங்களை நினைத்தாலே மனம் நடுங்குகிறது. அவள் மகனான உனக்கு ஒரு குறைவும் வராது" என்று மனப்பூர்வமாகக் கண்ணீரும் கம்பலையுமாக ஆசீர்வதித்தாள்.

"இதை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று கீழே இருந்த நகைப் பெட்டியை எடுத்துச் சுப்பு பாகீரதியம்மாளிடம் நீட்டினான்.

பாம்பைக் கண்டவள்போல் பின் வாங்கிய பாகீரதி அம்மாள், "அப்பா, அதை நான் இனிமேல் கையாலும் தொட மாட்டேன். இவ்வளவு கஷ்டங்களையும் பட்டு இதைத் திருடி மறைத்த பாவத்தைக் கழுவிய உன் அம்மாவுக்கும் உனக்குந்தான் இது இனிமேல் சொந்தம். எங்களுக்குப் பகவான் எந்தவிதமான குறையும் வைக்கவில்லை. இதை உன் மனைவியின் கழுத்தில் போடு. நான் சொல்வதைக் கேள்" என்றாள் பாகீரதி.

"இதை நினைத்தாலே என் நெஞ்சு நடுங்குகிறது. இதனால் நாங்கள் பட்ட கஷ்டங்கள் ஏழு தலைமுறைக்கும் போதும். இதை நீங்கள் ஏற்றுக் கொண்டால்தான் இனிமேல் எனக்கு வாழ்வு!" என்று மீண்டும் சுப்பு, நகைப் பெட்டியைப் பாகீரதியின் காலடியில் வைத்தான்.

திடீரென்று ராமநாதன் குனிந்து நகைப் பெட்டியை எடுத்து, "அம்மா, இன்று ஆடி வெள்ளிக்கிழமை. இன்று இதைப் பார்வதவர்த்தனி அம்மனுக்கு அர்ப்பணம் செய்துவிடலாமே, அவள் ஏற்றுக்கொண்டு இரண்டு குடும்பத்தையும் வாழ வைக்கட்டுமே" என்றார்.

கோயிலிலிருந்து அடித்த மத்தியகால மணிச் சத்தம் டாண் டாண் என்று கேட்டது.

# கிடாரி

சுந்தர ராமசாமி

மிகப் பெரிய காம்பௌண்டு அது. கற்சுவர். நடுவில் மிகப் பெரிய வீடு. மாடி வீடு.

மாடி வீட்டின் கொல்லை இடது மூலையில் உரக்கிடங்கும், அதையொட்டி கன்றுகளை மறிக்க கம்பழிக் கூண்டும், தொழுவமும்.

தொழுவத்துக்கு அடுத்தாற்போலிருந்த அறையைத்தான் கிழவர் தனது வாசஸ்தலமாக்கிக் கொண்டார். சில மாதங்கள் முன்னால் வரை அங்கு விறகு குவித்திருந்தது. அதைக் காலிசெய்து கைவசப்படுத்திக் கொண்டார், கிழவர்.

இப்பொழுது கொல்லைப்புறம்தான் அவரது ஆட்சிக்குட்பட்ட சாம்ராஜ்யம். வேலைக்காரன் சம்முகம், எஜமானியும் சமையல்காரியுமான செல்லம்மா, வேலைக்காரி, ஒரு கறவைப்பசு, ஒரு கற்பிணிப் பசு, ஒரு காளைக்கன்று ஆகியோர் குடைநிழல் பிரஜைகள். அதிலும் கால் நடைகள்தான் முக்கியமான பிரஜைகள். அவைகள் மத்தியில் தான் கிழவருக்கு நல்ல செல்வாக்கிருந்தது. அவருடைய அற்ப எண்ணங்கள்கூட அங்கு விதிகளாகி அமலாகிவிடும். அபிப்பிராய வேற்றுமைக்கு இடமேயில்லை.

சில மாதங்கள் முன்னால் வரை மாடி வீட்டில் மாப்பிள்ளை சபேசய்யர், மகள் குஞ்சம்மாள், பேரன் பேத்திகள் ஆகியோருடன், கூடி வாழ்ந்திருந்தார் கிழவர். மனத்துக்கு ருசிக்கவில்லை. மாப்பிள்ளை மகா முன்கோபி என்பது கிழவர் அபிப்பிராயம். கிழவருக்கு இங்கிதமே தெரியாதென்பது சபேசய்யர் தீர்மானம். சபேசய்யர் வருமான வரி ஆபீஸர் வேலையிலிருந்து ரிட்டயராகி, பொழுதை வீட்டிலேயே செலவு செய்யும் நிலை ஏற்பட்டதும் அரமும் அரமும் உரைந்தாற் போல், இருவர் உறவும் கிறீச்சிட்டது. முகதரிசனம் வாய்த்த மறுவினாடியே பரஸ்பரம் வெட்டிக் கொண்டார்கள்; மடக்கி மடக்கித் தாக்கிக்கொண்டார்கள். படீரென்று விலாவில் குத்துவார் மாப்பிள்ளை. மண்டையில் ஓங்கி அறைவார் மாமனார். எல்லாம் வார்த்தைகளில்தான். பெண்ணை வைத்துத்தானே கிழவருக்கு அந்த வீட்டில் மதிப்பு? பெண் குஞ்சம்மாளோ, மாடியில் அடைபட்டுக் கிடந்தாள். கீழே இறங்கி வரக்கூடாது.

முன்கட்டில் செல்வாக்கு இழந்துவிடவே, மெதுவாகக் கொல்லைப்புறம் நகர்ந்தார் கிழவர். விறகு அறையையும், தன்னுடைய அறையையும் காலி செய்தார். விறகும், ஓட்டை உடைசலும் நெற்குத்தும்

கொட்டகைக்கு இடம் மாறின. வெற்றிலைப் பையும், வறுவல் டப்பாவும், எண்ணெய்க் குப்பியும், செம்பும், மரஜோடும், விசிறியும், நார்க் கட்டிலும், விறகு அறைக்கு வந்தன.

சிறு வயதிலிருந்தே மாட்டுப் பைத்தியம் கிழவருக்கு. இடமாற்றம் அதற்கு மேலும் சுருதி கூட்டிற்று. அன்பையும், அரவணைப்பையும், ரத்தபாசத்தையும் தொழுவத்திலேயே கண்டு ஆனந்தக் களிப்பில் அழுந்திப்போனார் கிழவர்.

தொழுவத்தில் சலசலப்புக் கேட்டுக்கொண்டிருந்தது. இரவில் கண் விழிக்கும்போதெல்லாம், மாடுகளின் கால் அரவம், சிறுநீர் கழிக்கும் சர்...ர்...ர்ர், வைக்கோல் பிடுங்கும் சரசரப்பு, கன்றின் கழுத்து மணி 'ணிங், ணிங்'—இத்யாதி ஓசைகள் கேட்டவண்ணம் தான் இருக்கும். கிழவருக்கு இந்தப் பின்னணியோசை பழக்கப் பட்டுவிட்டது.

ஆனால் அன்று விடிவெள்ளிப் பொழுதில் ஏதோ அசாதாரணமான சூழ்நிலை தொழுவத்தில் உருவாகி வருவதாக உணர்ந்தார் கிழவர். கண் மூடியபடியே கட்டிலில் உட்கார்ந்து, எழுந்து நின்று இரவில் போர்வையாக மாறியிருந்த வேஷ்டியை இடுப்பில் சுற்றி, வேஷ்டியாக்கிக் கொண்டார். அறைக் கதவைத் திறந்தார். இருளில் இருள்தான் தெரிந்தது. பெரிய குடையொன்றை விரித்து வைத்ததுபோலிருந்தது அறை முன்னால் நின்ற ஒட்டு மா. இலைகளிடையே இருள் துண்டு துண்டாகத் தேங்கிக் கிடந்தது. வானத்தைப் பார்த்தார். உம், விடிய ஒரு மணி நேரமாகலாம்......

தொழுவத்தில் அரவம் கேட்டது.

சுவரைத் தடவியபடியே சுவர் அலமாரியைத் திறந்தார். மேல் தட்டிலிருந்து வெற்றிலைப் பையையும், கீழ்த்தட்டிலிருந்து ஓவல்டின் டப்பாவையும் எடுத்துக்கொண்டார். நார்க்கட்டிலில் உட்கார்ந்தபடி, டப்பாவைத் திறந்து ஏத்தங்காய் வறுவலை ஒவ்வொன்றாக வாயில் போட்டு மென்றார். 'ஸ்டாக்' சிறிதுதானிருந்தது. டப்பா காலி. பையை அவிழ்த்து இரும்பு உரலையும், உலக்கையையும் எடுத்து நிலைப்படியில் வைத்துக்கொண்டார். சிறிது நேரத்திற்கெல்லாம் 'ணங், ணங்' என்ற ஓசை, தாள லயம் தவறாமல் கேட்க ஆரம்பித்தது. விடிவெள்ளி நேரத்தில் இந்த ஓசை எழுவது பக்கத்து வீட்டுக்காரர்களுக்கும், சமையல் செல்லம்மாவுக்கும், சம்முகத்துக்கும், மாடு கன்றுகளுக்கும் பழக்கப்பட்டுப்போன விஷயம், சம்முகத்துக்கும், செல்லம்மாவுக்கும் அதுதான் அலாரம். இந்த ஓசை எழுந்ததும், படுத்திருக்கும் மாடுகளும் எழுந்து நின்று சோம்பல் முறிக்கும். சம்முகம் எழுந்துவந்து சாணியை வழித்தெறிந்துவிட்டு செம்பையும் எண்ணெய்க் கிண்ணத்தையும் எடுத்துக்கொண்டு வருவான். கட்டில் நிற்கும் கன்று பின்வாங்கி முன் பாய்ந்து, கயிற்றை வெட்டி வெட்டி இழுக்கும்.

ணாங்...ணாங்...—ணாங்...ணாங்...சம்முகம் எங்கே? காணோம்.

''சம்முகம், சம்முகம்'' என்று கூப்பிட்டார் கிழவர். பதிலில்லை.

...நர்ஸைக் கொண்டுபோய் வீட்டில் சேர்த்துவிட்டுப் படுக்கிற பொழுது மணி இரண்டு அடித்திருக்கும். அசந்து தூங்குகிறான் பாவம்...

கொம்பை வைக்கோல் அழியில் முட்டிமோதும் ஓசை கேட்டது. ...இந்த விஷமம் இரண்டுக்கும் கிடையாதே! புதிய பாடமோ?...

கிழவர் வெற்றிலையை மென்றுகொண்டே தொழுவத்துக்கு வந்தார். இருளின் திட்பம் ஒரு சொல்லுக்குக் குறைந்து, மெல்லிய கறுப்புத் திரை போர்த்தியது போலிருந்தது. உத்திரக் கட்டையைத் துழாவி தீப்பெட்டியை எடுத்து அரிக்கன் லாந்தரை ஏற்றினார்.

கன்றுக்குட்டிக் கூண்டை யொட்டி கறவை மாடு நின்றுகொண்டிருந்தது. அறைச் சுவரையொட்டி சினைமாடு நின்றுகொண்டிருந்தது. இரண்டு மாட்டுக்கும் நடுவில் கூரையிலிருந்து லாந்தர் தொங்கிக்கொண்டிருந்தது. தரையில் கிழவர் நின்றுகொண்டிருந்தார்.

லாந்தரின் இலேசான அசைவில், மாடுகளும் கிழவரும் கருநிறம் பூண்டு சுவரில் குறுக்கும் மறுக்கும் ஓடிக்கொண்டிருந்தார்கள். கிழவர் லாந்தரைத் தொட்டு ஆட்டத்தை நிறுத்தினார்.

கறவை மாட்டுக்கு மடுவில் பால் குத்த ஆரம்பித்து விட்டதால், தொடர்ந்து அலறிற்று. கிழவர் குனிந்து பார்த்தார். காம்புகள் 'உன்னைப்பார் என்னைப்பார்' என்றிருந்தன.

கூண்டினுள் முன்னுடம்பு தணியும்படி காலை அகலவிரித்து மூஞ்சியைக் கம்பழிக்குள் துருத்திக்கொண்டிருந்தது கன்று. இந்தப் 'போஸை' கண்டாலே அசாத்திய கோபம்மூளும் கிழவருக்கு. வேறு எதற்கோ செல்லும் பாவனையில் அதன் பக்கம் நெருங்கி, கரிய மூக்கில் நறுக்கென்று சுண்டிவிட்டு விடுவார். இரண்டு நிமிஷம் கழித்துப் பார்த்தால் மீண்டும் மூஞ்சியைத் துருத்திக்கொண்டுதான் நிற்கும் அது. கறவை மாடு நின்ற நிலையில் அதன் மடுவுக்கும், கன்றின் மூஞ்சிக்கும் நாலு விரல்தான் இடைவெளியிருக்கும், ஆனால் அதற்கு மேல் ஒரு அங்குலம் பின்வாங்கக் கழுத்துக் கயிறு கறவை மாட்டுக்கோ, ஒரு அங்குலம் முன்னேற, அழி கன்றுக்கோ இடம் தராது. இந்த நிலையை மிகவும் ரசித்தார் கிழவர்.

கொம்பால் அழியைத் தட்டும் ஓசை மீண்டும் கேட்டது. சினை மாடுதான்!

கிழவர் இந்தப் பக்கம் வந்தார். கர்ப்பிணியை மேலும் கீழும் பார்த்தார். எல்லாம் விபரீதமாகப் பட்டது. அடிக்கொரு தரம் வைக்கோல் அழியைக் கொம்பால் தட்டுகிறது. நிலைமாற்றி நிலை மாற்றி நின்று, நிலைகொள்ளாமல் தவிக்கிறது. பின்னங்காலை உதறிற்று.

இரவு வைத்த வைக்கோல் அப்படியே இருந்தது. கண் இமைகளில் ஈரம் படிந்து, கன்னத்தில் ஈரக்கோடும் விழுந்திருந்தது. கிழவர் வாலைத் தூக்கிப் பார்த்தார். மாசு தொங்கிவிட்டது. தீர்மானம் செய்துவிட்டார் கிழவர்.

மறுகணம் எக்களிப்போடு 'சம்முகம், சம்முகம்' என்று கத்தினார். பதிலில்லை. குரலில் பதற்றம். மேற்கொண்டு என்ன செய்யவேண்டு மென்பதும் தட்டுப்படவில்லை. நின்ற இடத்திலிருந்து தன்னுணர் வில்லாமல் முன்னும் பின்னும் சென்றார்.

கயிற்றில் தொங்கிய லாந்தரை அவிழ்த்துக்கொண்டு ஒட்டு மாவைச் சுற்றி நெற்குத்துச் சாவடிக்கு நகர்ந்தார்.

சந்தோஷம் தாங்க முடியவில்லை. அவர் ஹேஷ்யம் பலிக்கப் போகிறது. அமாவாசை தாண்டாது என்பது அவருடைய கணிப்பு. நோவு எடுத்துவிட்டதே. மாதக் கடைசிவரை இழுக்கும் என்றான் சம்முகம். அவனுக்கு என்ன தெரியும்? வஜ்ர மடையன்.

கிழவர் அடிவைக்க வைக்க, வலது புறத்தில் கிணற்றடியும், கம்பி வலைபோட்ட அடுக்களையும், ஸ்னான அறைக்குப் பின்னால் நின்ற ஐந்தாறு தென்னம்பிள்ளைகளும் விளக்கொளியில் புலப்பட்டன.

கொட்டகையின் ஒரு பக்கம்தான் சுவர். நாலு தூண்கள் மேல் எழுப்பிய கூரைதான் அது. ஒரு மூலையில் பிரம்மாண்டமான கல் யாண ஆட்டுக் கல், யானைக்குட்டி படுத்திருப்பது போலிருந்தது. மறுபக்கம் கூரையில் முட்டும்படி விறகு அட்டி. தட்டு முட்டு சாமான்கள். பின்புறம் சுவரையொட்டி நாலைந்து அடுப்புக்கள். நெல்லைப் போட்டுக் குத்துவதற்குக் கொட்டகையின் நடுவில் அடுப் புக்கு முன்புறம் சம சதுரமான கல்லைத் தரையோடு தரையாய் பதித் திருந்தது. கிழவர் விளக்கைத் தூக்கிப் பார்த்தார். கருங்கல்லில் தேங்காய்பூ டவல் விரித்தபடி யிருந்தது. டவலில் முதுகு அழுத்தத் தின் சுவடும் தெரிந்தது. அடுப்பின் மேல் சாய்வாக வைத்திருந்த பலகையில் தலை எண்ணெய் படிந்து, உள்ளங்கை அகலத்துக்குக் கறுப்பு அடையாய் அப்பியிருந்தது.

சம்முகத்தைக் காணவில்லை!

கிழவருக்கு ஏமாற்றமும் கோபமுமாக வந்தது. என்ன இது? மாட்டுக்கு வலியெடுத்துவிட்டது. எங்கே தொலைந்து போனான், மடசாம்பிராணி. மனத்துள் திட்டி நொறுக்கினார். கோபத்தை நேரில் காட்ட முடியுமா? திரும்பக் காட்டி விடுவான். ஆனால் சபேசய்யர் வருகிறார் என்றாலோ அரையோடு நீரைக் கழித்துவிடுவான். நர்ஸை வீடுகொண்டு போய்ச் சேர்க்கப் போனவன் அப்படியே தொலைந்து போயிருப்பானோ?

சம்முகத்தை எழுப்பி, தனது ஹேஷ்ய சூட்சமத்தையும், பிரதா பத்தையும் ஒரு பாட்டம் பாட எண்ணியவர் ஏமாந்து அடுக்களைப் பக்கம் சென்றார்.

அடுக்களையில்தான் செல்லம்மா படுப்பது வழக்கம். இருபது வருடமாக அந்தக் குடும்பத்தோடு ஒட்டிப்போன ஜீவன். கிழவர் கண் விழிக்கும் தறுவாயில் எழுந்திருந்து வென்னீர் அடுப்பைப் பற்ற வைத்து அடுக்களை அடுப்பையும் மூட்டுவாள்.

இன்று என்ன, எல்லாம் விபரீதமாக யிருக்கிறது. செல்லம்மா வும் எழுந்திருக்கவில்லையே.

கிழவர் அடுக்களைக் கம்பி வலைமேல் லாந்தரைத் தூக்கிப் பார்த் தார். வழக்கமாகப் படுத்திருக்கும் இடத்தில் செல்லம்மாவைக் காணவில்லை. அப்பொழுதுதான் கிழவருக்கு நினைவில் தட்டிற்று. பிரசவ அறையில் படுத்திருப்பாள். பாவம், செல்லம்மா, தன் வயிற் றுப் பெண்ணுக்குப் பார்ப்பதுபோல் பார்த்தாள். கோயிலில் வைத் துக் கும்பிட வேணும், செல்லம்மாவை. அவளுக்காகத்தான் கோமதி நேற்று தப்பிப் பிழைத்தாள். ஆமா, அந்த மாராசிக் காக. அவள் கைராசி அப்படி; டாக்டரே மேலும் கீழும் பார்க்க ஆரம்பித்து விட்டாரே. 'பகவானே, எனக்கு அபகீர்த்தி தேடித் தராதே. என்னை இந்த வீட்டைவிட்டுத் துரத்திவிடாதே' என்று செல்லம்மா புலம்பினளே, அந்தப் புலம்பலுக்குச் செவிமடுத்து அபகரித்த உயிரை திரும்ப தந்துவிட்டது தெய்வம். ஒவ்வொரு தடவையும் இந்தப் பாடுதான் கோமதிக்கு. டாக்டர்தான் வர வேண்டும். ஆயுதம்தான் போட வேண்டும். ஒவ்வொரு தடவை யும் 'போச்சு போச்சு' என்றிருக்கும். பன்னிரண்டு மணிக்குள்ளாக டாக்டர் நாலுதடவை வரும்படியாகி விட்டதே. ஒரு மட்டும் ஒரு மணிக்குக் குழந்தை இறங்கி வந்தது. ரத்தக் கசிவு ஜாஸ்தியாம். இரண்டு கையையும் மாறி மாறிச் சல்லடையாகத் தொளைத்துவிட் டார்கள். இன்னும் ஒரு வாரத்துக்கு இமைக்குள் வைத்துப் பார்க்க வேண்டுமென்று சொல்லிவிட்டான் டாக்டர். யார் பார்க்கப் போகிறார்கள் இமைக்குள் வைத்து? பெற்ற தாயை மாடியில் உட் கார்த்தி வைத்திருக்கிறது. ஐந்து வருடமென்ன, அதற்குமேலுமிருக் கும். துரதிர்ஷ்டம் பிடித்தவள். பிரசவ வேளையில்கூட பெற்ற பெண் பக்கத்திலிருந்து வயிற்றைத் தடவக் கொடுத்துவைக்கவில்லை. ம்...இப்பொழுது இவள் எழுந்திருக்கவேண்டுமே...எழுந்திருப்பது என்ன? எழுப்பிவிட்டுத்தானே கீழே உட்காருவாள் செல்லம்மா...

பச்சைக் குழந்தை 'வீலெ'ன்று கத்திற்று. கிழவர் சிரித்துக் கொண்டார். சம்முகம் கட்டிடத்தின் வலதோரமாக விறுவிறு என்று வருவதைப் பார்த்துவிட்டுக் கட்டிடத்தின் இடதோரமாக நகர்ந்தார் கிழவர்...அவனுகக் கண்டுபிடிக்கிறுனு என்றுதான் பார்ப்போமே...

கொய்யா மரத்துக்கும் பலா மரத்துக்குமிடையே இருக்கும் தேன் கூட்டுக்கு முன்னல் வந்ததும் கிழவர் தலையைத் தூக்கிப் பார்த் தார். கட்டிடத்தின் அந்த இடத்தில் கீழே ஒரு பெட்ருமும், மாடி யில் ஒரு பெட்ருமுமிருந்தது. கீழறையில்தான் தலைக்கு நாள் நடு

நிசியில் கோமதி ஐந்தாவது பெண் குழந்தையைப் பெற்றெடுத்திருந்தாள். மாடியறைதான் பல ஆண்டுகளாகக் குஞ்சம்மாளுக்கு உலகம். குஞ்சம்மா கட்டிலையொட்டி ஒரு சாளரம். அப்பொழுது சாளரக் கதவு சாத்தியிருந்தது.

கிழவர் கோமதி படுத்திருந்த அறைப்பக்கமாக வந்து சன்னலின் ஒரு பகுதியைத் திறந்தார். திறந்த இடத்தில் கோமதியின் முகம் தெரிந்தது. சன்னல் விளிம்பில் ஒரு மெழுகுவர்த்தியை ஏற்றி வைத்ததுபோல் முகத்தில்மட்டும் பிரகாசம் பரவிற்று. அறைக்குள் அப்பொழுதும் இருள் சன்னமாகத் தேங்கிக் கிடந்தது.

கோமதி கைகளைக் கட்டியபடி தூங்கிக்கொண்டிருந்தாள். இமைகள் பெரிதாய் சாத்தியிருந்தன. இரண்டு நிமிஷம் அவள் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தார். தலைக்கு நாள் மாலையில் பின் வராண்டாவில் தலையைக் கோதிக்கொண்டிருந்த பெண்தானா இவள்? கிழவரால் நம்ப முடியவில்லை. என்ன மாற்றம்! ஒரே இரவில் குழந்தை மாதிரியாகிவிட்டதே முகம். முகத்தில்தான் என்ன பேதைமை.

கால் மாட்டில், கட்டிலைச் சற்றுத் தூக்கி வைத்திருந்தது. மீண்டும் குழந்தையின் சிணுங்கல் கேட்டது.

''கோமதீ'' என்று ரகசியமாகக் கூப்பிட்டார் கிழவர்.

கோமதி அதிர்ச்சியடைந்து கண்விழித்ததைப் பார்த்தபொழுதுதான், கூப்பிட் டெழுப்பியிருக்க வேண்டாமென்று எண்ணினார் கிழவர்.

''என்ன தாத்தா, என்ன?'' என்று பதறினாள் கோமதி.

''ஒண்ணுமில்லையம்மா. சும்மாத்தான். பசுவுக்கு வலியெடுத்திருக்கு'' என்றார் கிழவர்.

குழந்தையின் சிணுங்கல் அழுகையாயிற்று.

''மாமீ, மாமீ'' என்று கூப்பிட்டாள் கோமதி.

''செல்லம்மா, செல்லம்மா'' என்று கூப்பிட்டார் கிழவர்.

தான் சொன்னது கோமதியின் காதில் விழவில்லையோ என்று சந்தேகப்பட்டதுமாதிரி மீண்டும் ஒரு தடவை, ''பசுவுக்கு நோவெடுத்திருக்கு, இன்னும் ஒரு மணி நேரத்தில் கன்று போட்டு விடும்'' என்றார்.

கோமதியின் முகம் சிலைமாதிரியிருந்தது.

செல்லம்மா எழுந்திருக்கும் ஓசை கேட்டது. அறையுள் ஒளி பரவிற்று. கட்டில் பக்கம் வந்தாள் செல்லம்மா. கை நிறைய வைத்துக்கொண்டிருந்த வெண்மையான துணிகளிடையே, வெண்மையான இரு கால்களைக் கண்டார் கிழவர். உதட்டோரம் கன்னம்

வரை விரிந்தது. மேல் வரிசையில் இரண்டு பற்கள் இல்லாத அதே இடத்தில், கீழ் வரிசையிலும் இரண்டு பற்கள் இல்லை கிழவருக்கு. அவர் சிரிக்கிறபொழுது மேலும் கீழுமாக இடைவெளியைப் பார்ப்தில் ஏற்படும் அனுபூதியை அனுபவித்தவர்கள், அத்தகைய தருணத்திற்காகக் காத்திருந்து வாய்க்கிறபொழுது வீணுக்கமாட்டார்கள். கோமதி கிழவருடைய வாயைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

குழந்தையைப் பக்கத்தில் போட்டாள் மாமி. மார்பிலும், கையிடுக்கிலுமாகப் புதைந்தது குழந்தை; அழுகையும் அவரோ கணத்தில் தேய்ந்தது.

தன்னுடைய பேச்சை ஓரளவேனும் செவி கொடுத்துக் கேட்கும் கோமதியும் அவள் அப்பாவைப் போலாகிவிட்டாளா என்ன! கிழவர் நம்பிக்கை யிழக்காமல் மீண்டும் சொன்னார்.

''பசுவுக்கு வலியெடுத்திருக்கு, இந்தத் தடவையாவது கிடாரி பிறக்குமின்னு நினைக்கிறேன்.''

பதில் பேசவில்லை கோமதி.

கிழவருக்கு ஒரே ஏமாற்றம். இரண்டு பக்கமும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டார். சிறிது நேரம் கழித்து, "ஒரு மட்டும் செத்துப் பிழைத்தாய்!" என்றார்.

"பிழைத்திருக்க வேண்டாம்" என்றாள் கோமதி.

உள்ளங்கால் வழி மின்சாரம் பாய்ந்து உடம்போடு தலை வரை ஓடியது கிழவருக்கு.

"ஏண்டி பெண்ணே இப்படிப் பேசறே?" என்றார் கிழவர்.

கோமதியின் கன்னத்தில் கண்ணீர் வழிந்தது.

கிழவருக்கு விஷயம் மங்கலாகப் புரிய ஆரம்பித்தது.

"அழாதே, ஈச்வர சங்கல்பம்" என்று சொல்லிக்கொண்டே மெதுவாக சன்னலைச் சாத்தியவர் மீண்டும் திறந்து, "பசு கன்னு போட்டதும் வந்து சொல்றேன்" என்று சொல்லிவிட்டு அவள் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தார்.

அப்பொழுது நடு ஹாலில் அலாரம் அடிப்பதும் அதைத் தொடர்ந்து, "யாரது அங்கே? என்ன சத்தம்?" என்று சபேசய்யர் அதட்டும் குரலும் கேட்டன.

"தாத்தாதான் அப்பா" என்றாள் கோமதி. அதற்குமேல் அங்கு நிற்காமல் மடமடவென்று பின் வாங்கினார் கிழவர்.

திரை வெளுக்க ஆரம்பித்து விட்டது. கிழக்கிலிருந்து கிரணங்கள் தங்க ஊசிகள் போல் காம்பௌண்டுச் சுவரைத் தாண்டி கொய்யா மரத்தில் விழுந்துகொண்டிருந்தன.

கிழவர் தேன்கூடு பக்கம் வந்ததும் மீண்டும் தலையைத் தூக்கிப் பார்த்தார். அப்பொழுதும் சாளரக்கதவு சாத்தியிருந்தது.

"குஞ்சம்மா, குஞ்சம்மா" என்று கூப்பிட்டார் கிழவர்.

தாழ்ப்பாளைத் தட்டும் ஓசை. சாளரக்கதவு திறந்தது. குஞ்சம்மாள் தலையை வெளியே நீட்டினாள்.

குஞ்சம்மாள் பல வருடங்களாக மாடியில்தான் அடைத்துக் கிடந்தாள். டி. பி. என்று டாக்டர்கள் சொன்னார்கள். ஆனால் கிழவர் இருமல் என்றுதான் சொல்லுவார். வீட்டுக்கு வருகிறவர்களிடமெல்லாம் 'என் மனைவிக்கு டி. பி., என் மனைவிக்கு டி. பி.' என்று சபேசய்யர் சொல்லுவது கிழவருக்குப் பிடிக்காது. 'என் பெண்ணுக்கு இருமல்' என்று தான் அவர் சொல்லுவார். சபேசய்யரும் அப்படிச் சொன்னால் போதுமென்பது கிழவருடைய அபிப்பிராயம். இதை வியாஜமாக வைத்தே மாமனாருக்கும், மாப்பிள்ளைக்கும் லடாய் மூளும்.

சபேசய்யரின் மருத்துவ ஞானம் குஞ்சம்மாளை மாடியில் ஒதுக்கித் தள்ளிவிட்டது. வியாதிக்காரிபோலா இருப்பாள் குஞ்சம்மாள்? ஜம்பர் கை நுனியில் சதை பிதுங்கும். யாராவது பார்த்தால் 'மாராசி. உடல் அசையாமல் தின்று கொழுத்திருக்கிறாள்' என்பார்கள். சீவி முடிந்த தலை. நிறைய ஜரிகை போட்ட காஞ்சீபுரம் பட்டுச் சேலை. வைர மூக்கித்தியையும் தோட்டையும் அடிக்கடி கழற்றித் துடைத்துக்கொண்டிருப்பாள். உடம்பு காகித வெளுப்பு. சில சமயம் வறட்டு இருமல் கிளம்பிவிட்டதென்றால், சிரட்டையைப் பாறைமேல் தேய்ப்பதுமாதிரி சொர சொரவென்று இருமித் தள்ளிவிடும். குளிமுறையன்று மட்டும் கீழே வருவாள். வாரத்தில் ஒரு நாள் ஸ்னானம். குளித்துவிட்டு மாலைவரை கீழே உட்கார்ந்து கொண்டிருப்பாள். அப்பாவுடைய மாட்டுப் பைத்தியம் பெண்ணுக்கும் சிறிதுண்டு. மாட்டை அவிழ்த்துக்கொண்டு வந்து துளசி மாடம் பக்கம் நிறுத்திக் காட்டுவார்கள். மாலையில் மீண்டும் மாடிக்குள் புகுந்துவிடுவாள் குஞ்சம்மா.

விடியற்காலம் ஆறரை மணிக்குக் கிழக்கு வெயிலடிக்கையில், ஏற்றிய லாந்தருடன் அப்பா நிற்பதை விழிபிதுங்கப் பார்த்தாள் குஞ்சம்மா.

"இதென்ன கோலம் அப்பா?"

"குஞ்சம்மா, விசேஷம் தெரியுமோ?"

"என்னப்பா, என்ன விஷயம்?"

"பசுவுக்கு நோவெடுத்திருக்கு, இன்னும் ஒரு மணி நேரத்தில் கன்னுபோடும்."

"அப்பா, கோமதிக்குத் திரும்பவும் பெண் குழந்தைதானா பிறக்கணும். நமக்கு ஏன் இந்த சோதனை?" ஆற்றாமை தொனித்தது குஞ்சம்மா குரலில்.

கிழவர் தேன்கூட்டைப் பார்த்துக் கொண்டிருந்தார். ஒவ்வொரு ஈயாகக் கூட்டின் முற்றத்திற்கு வந்து, ஒரு கணம் தயங்கிவிட்டு சட்டென்று உயரப் பறந்தது.

கிழவர் தேனீயைப் பார்த்தப்படியே தலையைத் தூக்காமல் மெல்லிய குரலில் சொன்னார்:

"இந்தத் தடவையாவது கிடாரி போடும்னு நினைக்கிறேன், ஈச்வர சங்கல்பம் எப்படி இருக்கோ தெரியலை."

"அதிர்ஷ்டம் கெட்ட பெண். வரிசையா நாலு பெண் பிறந்தாச்சே. போராதோ? இந்தத் தடவையும் இப்படியாகும்னு நான் நினைக்கவே இல்லை. நேத்து ரா' முச்சூடும் கண்ணைக் கொட்டலை தான். அது பிறந்த வேளை. தலையெழுத்துக் கட்டை, யார்தான் என்ன செய்ய முடியும்?" என்றாள் குஞ்சம்மா.

"இதுவரையும் பிறந்த ஒரு கன்னையாவது வீட்டோடெ வச்சுக்கலை. தவிட்டு விலைக்குப் பத்திண்டு போச் சொல்லிட்டார் மாப்பிள்ளை. எனக்குத்தான் வயத்தெ எரிஞ்சுது. எதிரே நின்னு ஒரு வார்த்தை சொல்ல முடியுமோ? துர்வாசர் சதா மூக்கிலே நின்னுண்டிருப்பர். 'காளைங்கன்னை வச்சுண்டு சாணம் வாரிண்டிருக்க போறேரோ'ன்னு ஒரு வார்த்தை கேட்டுட்டா வாயடைச்சுப் போயுடுமே, என்ன செய்வே சொல்லு? வாஸ்தவந்தானே? நமக்கென்ன வயலா, கரையா, வண்டியா? ஆனால் இந்தத் தடவை நான் சொல்றேன் குஞ்சம்மா, நீ வேணாப் பாத்துக்கோ, 'எப்படியப்பா இப்படிச் சொன்னேர், பொட்டுப் போட்டாப்லெ'னு கேக்கப் போறே. கிடாரிதான் பிறக்கப் போறது. ஆமாம், கிடாரிதான் பிறக்கப் போறது" என்றார் கிழவர்.

"நான் ஒண்ணைச் சொல்றேன், நீர் வேறெதையோ சொல்றேரே?" என்று கேட்டாள் குஞ்சம்மா.

கிழவர் அதற்குப் பதில் சொல்லவில்லை. தேன்கூடு வாசலையும், மங்கி எரிந்து கொண்டிருந்த லாந்தரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டார்.

கிழவர் இரண்டு எட்டு வைத்து விட்டு தலையைத் திருப்பிப் பார்த்த பொழுது குஞ்சம்மா தலையைக் காணவில்லை.

"குஞ்சம்மா, குஞ்சம்மா" என்று மீண்டும் இரு தடவை கூப்பிட்டதும் மாடியில் தலை முளைத்தது.

"டப்பா காவி" என்றார் கிழவர்.

"ஓமப்பொடி பிழிஞ்சிருக்கு, போட்டுத் தரச் சொல்றேன்."

கிழவர் தலையைச் சரித்துக்கொண்டு யாருக்கோ சொல்வது போல் சொன்னார்.

"குஞ்சம்மா, வருத்தப்படாதே. எல்லாம் ஈச்வர சங்கல்பம்; இதெல்லாம் நம்ம கையிலெ இல்லே. அவன் பிறக்கணும்னு நெனக்கறது தான் பிறக்கும். இப்பொ நான் கிடாரி பிறக்கும்னு சொல்றேன். நான் சொல்றேங்கறதுக்காக பிறந்துடாது. அவன் நினைக்கணும். ஆனு அவன் இந்தத்தவா கிடாரி பிறக்கும்படியாத்தான் நினைப்பாங்கற நம்பிக்கை இருக்கு எனக்கு. எப்டினு கேப்பே? பதில் கிடையாது. நம்பிக்கை; அவ்வளவுதான்..."

கிழவர் பேசிக்கொண்டே போனுர்.

குஞ்சம்மா தலையை இழுத்துக்கொண்டு விட்டாள்.

தொழுவத்தில் மாடு அலறும் ஓசை கேட்டது. கிழவர் வேகமாக முன்னேறும் பாவனையுடன் தொழுவத்தை நோக்கி நகர்ந்தார்.

கிழவர் தொழுவத்துக்கு வருகிற பொழுது சம்முகம் பாலைக் கறந்து கொண்டிருந்தான்.

லாந்தரை அணைத்துக் கயிற்றில் கட்டிக்கொண்டே, "ஏய் சம்முகம், ராத்திரிப் பூரா இருமல் கேட்டுதே, பனிலெ சளி புடிச்சுண்டிருக் கோடா?" என்று கேட்டுக்கொண்டே அடக்க முடியாமல் சிரித்தார். சம்முகம், கிழவர் வாயைப் பார்த்து விட்டுத் தலையைக் குனிந்து கொண்டான்.

"நர்ஸம்மாவை கொண்டு போய் வீட்டிலே தள்ளிப்போட்டு அப்படியே சுசீந்தரத்தைப் பார்த்து நடையைக் கட்டினேன். நேத்து ரிஷப வாகனமில்லா. பெரிய வாசிப்பு" என்ருன் சம்முகம்.

கிழவர் அவன் பக்கத்தில் வந்து கண்களில் விஷமம் பொங்க, "ஏய் சம்முகம், 'கீப்' ஏதாவது வச்சிருக்கியோ 'கீப்'?" என்ருர்.

"போங்க சாமீ" என்று சிரித்தான் சம்முகம்.

கிழவர் திடீரென்று குரலை ஏற்றிக்கொண்டு, "டேய், ஆணமடையா, வஜ்ரசும்பா, இருளடிச்சுப் போச்சோடா உன் கண்ணிலெ" என்று கத்தினுர்.

குரலில் மிடுக்கு, போலித்தனம்.

பால் செம்பைப் பதனமாக மூலையில் வைத்துவிட்டுக் கண்கள் விரிய இமைக்காமல் கிழவரைப் பார்த்தான் சம்முகம்.

"அட சாம்பிரணி மடையா" என்று கத்தினுர் கிழவர்.

சம்முகத்துக்கு ஒன்றுமே புரியவில்லே. தலையைச் சாய்த்துக் கொண்டு, பிடரியைச் சொறிந்தபடி 'எதையாவது மறந்து போனேமா' என்று யோசித்தான்.

"விரிசம் பழம், விரிசம் பழம்" என்று சொல்லிக்கொண்டே சினைமாடுக்குப் பக்கத்தில் சென்று நின்றுகொண்டு, "இங்கே வா" என்று கூப்பிட்டார்.

சம்முகம் வந்தான்.

"குருட்டுக் கண்ணைத் திறந்து பாரு" என்றார் கிழவர்.

சம்முகம் இரண்டு நிமிஷம் மாட்டைக் கூர்ந்து பார்த்தான். விஷயம் பிடிபட்டது.

"வலி கண்டுடுத்துப் போலிருக்கே" என்றான்.

"என்னுது?"

"வலி கண்டுடுத்து."

"வலி கண்டுடுத்து. இல்லையா! அடேயப்பா. எப்படியடா சம்முகம் சொல்லிப்புட்டே? அந்த வித்தையெ கொஞ்சம் சொல்லித்தாடா எனக்கு" குத்தலான குரலில் சொல்லிக் கொண்டே வந்து, குரலை மாற்றி, "டேய் வலி கண்டுடுத்துனு அந்த ரூமிலெ இருந்த மேனிக்குத் தெரிஞ்சுண்டு தானேடா நான் எழுந்து வந்தேன். கூப்பிட்டுச் சொல்லித்து எங்கிட்டெ. நீயெல்லாம் 'காலை பெத்துதின்னு கயிறு எடு'னு சொல்ற ஜாதி. மாடில்லாத ஊரிலெ பிறந்தவன். இன்னிக்கு கன்னு போட்டுடுமாம்! கண்டு பிடிச்சு சொல்லிப்புட்டான் பிரகஸ்பதி!" குரலையும் வலித்து, முகத்தையும் வலித்தார் கிழவர்.

சம்முகத்துக்கு முகம் தொங்கிப் போய்விட்டது. கிழவர் மேலும் வெற்றிவாகை சூடிக்கொண்டே போனார்.

"நீ என்ன சொன்னே? இந்த மாசம் கடேசிலேதான் பாக்கணும் மின்னெ. நான் என்ன சொன்னேன்? அமாவாசை தாண்டினு உன்னைத் தூக்கிண்டு இந்த வீட்டைச் சுத்தி நாலுதரம் வரேன்னு சொன்னேன். சொன்னேனா? என்னாச்சு? என்னடாய்யா பேச்சு மூச்சில்லெ? வெத்தலை போட்டுண்டிருக்கயோ?"

சம்முகத்துக்கு அவமானம் தாங்க முடியவில்லை.

சிரித்துக் கொண்டே அவசியமில்லாமல் அங்குமிங்கும் சென்றார் கிழவர். சம்முகத்தை வெற்றி கொண்ட பெருமிதம் முகத்தில் விளையாடிற்று.

"என்னுது நின்னுண்டிருக்கே? சோளக்கொல்லை பொம்மை மாதிரி. சர சரானு ஜோலியைப் பாரு. சாணத்தை அள்ளிப்போடு. ரெண்டு சாக்குத்துண்டு எடுத்துண்டு வா. கொஞ்சம் பொடி வைக்கோலைச் சுருட்டி வச்சுக்கோ. மொண்ணைக் கத்தி ஒண்ணு வச்சிண்டிருந்தயே, அதெ சித்தெ தீட்டிக்கறயா? கன்னு பிறந்து விழுந்ததுமே சித்ரவதை ஆரம்பிக்க வேண்டாம்."

"இந்தத் தடவையாவது கிடாரி பிறக்கணும், சாமீ" என்றான் சம்முகம்.

"சந்தேகப்பட்டு சந்தேகப்பட்டு அழுது வழியாதேன்னு எத்தனை தடவைதான் சொல்றது? நம்புடா, பிறக்கும். நான்

சொல்றேன், இந்தத் தவா கிடாரிதான் பிறக்கப் போறது. அப்படிப் பிறக்காட்டா, இதோப் பாரு என்னை இப்படி சொடக்குப் போட்டுக் கூப்பிடு. ஆமாம் சொடக்குப் போட்டுக்கூப்பிடு'' கிழவர் சொடக்குப் போட்டுக் கொண்டே நாலு வீடு கேட்கும்படி இரைந்தார். உத்ஸாகம் கரை புரண்டு விட்டது.

சம்முகம் மடமடவென்று வேலையைக் கவனித்தான். கிழவர் தொழுவத்தில் உட்கார்ந்துவிட்டார்.

கிணற்றடியிலிருந்து வாளியை எடுத்துக் கொண்டு வருகிற பொழுது, சம்முகம் கிழவர் பக்கம் மிகவும் நெருங்கிவந்து, ''இருந்தாலும் இந்தத் தவாவும் கோமதியம்மைக்கு பொட்டைப்புள்ளெ பொறக்கணுங்குதில்லே. அய்யருக்கு ரொம்ப வருத்தம். அசந்து போயுட்டாரு அசந்து'' என்று சொல்லிக்கொண்டே வாளியைக் கீழே வைத்தான்.

''அம்புட்டும் கண்டே, போடா போ'' என்றார் கிழவர்.

''உடனெ, அப்படிச் சொல்லிப்புட்டேளே. நானும் பதினொரு வருச மாட்டு இதுக்குள்ளே தாலா லாந்திக்கிட்டு வாறேன். அய்யரு 'நேச்சர்' எனக்கும் கொஞ்சம் கொஞ்சம் தெரியும்னு வையுங்க.''

''ஆமாம், நான் பிறக்கறதுக்கு முந்தியே நீ இங்கேதான் இருக்கெ. மாடுக்கு வலி யெடுத்ததெப் பாக்கத் தெரியலெ, அளக்கறான்.''

அசப்பில் மாடுபக்கம் திரும்பிய கிழவர், ''டேய் மாடு படுத்தாச்சு, சாக்குத் துண்டெ எடுத்துண்டு வா. ஓடு'' என்று கத்திக்கொண்டே மாடு பக்கம் விரைந்தார்.

அதே சமயம் கட்டிடத்தின் முன் பகுதியிலிருந்து ''சம்முகம் சம்முகம்'' என்று, இரண்டரைக் கட்டையில் சபேசய்யர் குரல் கேட்டது.

சம்முகம் வாசலைப் பார்த்து ஓடினான்.

குழந்தைகள் எழுந்திருக்கும் சமயம் அது. பாயைச் சுருட்டி பாய்த் தூக்கில் வைப்பதற்காகச் சம்முகத்தை அந்த நேரத்தில் சபேசய்யர் கூப்பிடுவது வழக்கம்தான்.

குழந்தைகள் வரிசையாக நடு ஹாலில் படுத்திருப்பார்கள். கோமதியின் பெண் குழந்தைகளில் சச்சு, பங்கசம், கனகம் மூன்று பேரும் அம்மாவுடன் வந்திருந்தார்கள். மூத்த பெண் அன்னபூர்ணி மட்டும், படிப்பு வீணாக வேண்டாமென்ற எண்ணத்திலும், 'கூப்பிட்ட சத்தத்திற்கு என்ன' என்று கேட்பதற்கும் அப்பாவுடன் தானிருந்தாள்.

சபேசய்யரின், பிள்ளை வயிற்றுப் பேரன் வெங்குவின் தாயார் பிரசவத்துக்குத் தாய்வீடு சென்றிருந்தாலும் அவன் இங்கேதான்

இருந்தான். செல்லம்மாவிடம் நல்ல ஒட்டுதல். அவனுடைய அப்பா சீட்டாட குற்ருலம் சீசனுக்குச் சென்றிருந்தார்.

குழந்தைகளில் பங்கசமும் வெங்குவும் ஒரு ஜோடி; சேர்ந்தே திரிவார்கள். சச்சுவும் கனகமும் மற்ருெரு ஜோடி.

வெங்கு, பிறந்த மேனிக்கு பங்கசம் பின்ருல் திரிந்துகொண்டிருப்பான். அரையில் துணியோடு அவனைத் பார்க்க முடியாது. நிஜாரைப் போட்டால் மறுகணம் அதை அவிழ்த்துத் தோளில் போட்டுக்கொண்டு விடுவான். அப்படியிருப்பதில் அவனுக்குப் பேரானந்தம். அதோடு அவனுடைய இரட்டைமாடி பஸ்ஸை அரைஞாணில் கட்டிக்கொள்ளவும் நிஜார் போடுவது இடைஞ்சலாக இருந்தது.

குழந்தைகள் நால்வரும் தலைக்கு நாள் இரவு, வேதனைக் குரலையும், அலறலையும் கேட்டபடியே தூங்கியவர்கள். ஏழு மணிக்கெல்லாம் இடுப்புவலி எடுக்க ஆரம்பித்து விட்டது. அதற்கு முன்ருலேயே அம்பிப் பாப்பா பிறக்கப் போகிறது என்ற பேச்சு அடிக்கடி அடிபட்டுக் கொண்டிருந்தது.

அறையிலிருந்து கிளம்பிய ஓலம் அலை அலையாய் வீடு முழுவதும் பரவிற்று. குழந்தைகள் இருளடித்த முகத்தோடு வளைய வந்தன. அவசரமாக அங்குமிங்கும் பாய்ந்து கொண்டிருந்த பெரியவர்களை வழியில் இடைமறித்துப் பேசவும் முடியவில்லை அவர்களால்.

பங்கசமும் வெங்குவும் சாத்தியிருந்த அறைக் கதவு முன்ருல் நின்று செல்லம்மா மாமி வருகிருளா என்று காத்துக் கொண்டிருந்தனர். இரண்டு தடவை நர்ஸ் வெளியே வந்தபொழுதும் மலையாளத்தில் பேசி விரட்டிவிட்டாள். அவள் கண்முன்ருல் விலகிக்கொண்டு, உள்ளே மறைந்ததும் பழையபடி கதவண்டை வந்து நின்றுகொண்டார்கள், குழந்தைகள்.

காலால் கதவைத் தள்ளிக்கொண்டு ஒரு பெரிய 'பேஸின்' பாத்திரத்தைக் கையிலேந்தியபடி பிரத்தியக்ஷமாளுள் மாமி.

இரண்டு குழந்தைகளும் பின்ருல் சென்ருர்கள்.

"அம்பிப் பாப்பா பிறந்தாச்சா மாமீ?" என்று கேட்டாள் பங்கசம்.

"இன்னும் பிறக்கிலடீ, நீங்க ரெண்டுபேரும் படுத்துண்டு தூங்குங்கோ. காலம்பற அம்பிப் பாப்பாவைக் காட்டறேன்" என்ருள் மாமி.

உடனடியாகக் குழந்தையைப் பார்க்கலாமென்றுதான் வெங்கு எண்ணியிருந்தான். மாமியின் பதில் ஏமாற்றமாக இருந்தது. அவன் கிழவி மாதிரி முகத்தைக் வைத்துக் கொண்டான். மாமி ஏமாற்றத்தைப் புரிந்துகொண்டு சொன்ருள்.

"டேய், பங்கசத்துக்கு அம்பிப் பாப்பா பிறக்கும். நாளைக்கு பாயச முண்டு."

"பால் பாயசமா?" என்று கேட்டான் வெங்கு.

"ஆமாம், பால் பாயசம் தான். நிறைய சர்க்கரை போட்டு" என்ருள் மாமி.

பங்கசம் படுக்கச்சென்ருள். வெங்குவும் பின்னால் சென்ருன். படுத்ததும் தூங்கிப் போனார்கள் இருவரும்.

அம்பிப் பயலைப் பார்த்துவிட்டுத்தான் தூங்குவது என்று கங்கணம் கட்டிக்கொண்டதுபோல் கண்ணைக் கசக்கியபடியே வளைய வளைய வந்தார்கள் சச்சுவும், கனகமும். கோமதி அலறுகிற பொழுதெல்லாம் சச்சுவுக்குத் தூக்கித் தூக்கிப் போட்டது. எக்கச் சக்கமாய் சபேசய்யர் முன்னால் போய் விழுந்துவிட்டால் படுக்கையில் பிடித்துத் தள்ளி விடுவாரேயென்ற பயத்தில், அவருக்கு டிமிக்கி கொடுத்துக்கொண்டே இருவரும் சுற்றிச் சுற்றி வந்தார்கள். தூக்கம் இமையை அழுத்தித் தலையைக் கிறுக்கியபொழுது சச்சு குழாயடிக்குச் சென்று குளிர்ந்த நீரை முகத்தில் விட்டுக்கொண்டாள். அதை அப்படியே காப்பியடித்தாள் கனகம்.

பின்னால் காலரவம் கேட்டுத் திரும்பிப் பார்க்கிறபொழுது சபேசய்யர் பின்னால் நின்று கொண்டிருந்தார். இருவருக்கும் உடம்போடு வெல வெலத்தது.

"இன்னமுமா முழிச்சுண்டுருக்கேள், ஏண்டி?" என்று கேட்டார் சபேசய்யர்.

"அம்பிப் பாப்பாவைப் பாக்கணும்" என்ருள் கனகம்.

சபேசய்யர் சிரித்துக்கொண்டார்.

"அம்பிப் பயலைக் காலையிலே பாக்கலாம்மா, இப்போ ரெண்டு பேரும் படுத்துண்டு தூங்குங்கோ" என்ருர்.

இரண்டு குழந்தைகளும் சேர்ந்து நடந்தன. சபேய்யர் கை களிரண்டும் குழந்தைகளின் தோள்களில் தொட்டும் தொடாமலும் தொட்டுக்கொண்டு படுக்கைவரை வந்தன.

படுக்கையில் படுத்த பின்பும், அறையிலிருந்து எழுந்த பேரொலி குழந்தைகள் மனத்தைத் தாக்கி, பீதியைக் கிளறிவிட்டுத் தூங்க விடாமல் வருத்திற்று. சச்சு பக்கத்தில் மிக நெருங்கிப் படுத்து கொண்டு அவள் கையைப் பற்றிக்கொண்டாள் கனகம். ஒரு தடவை கோமதியின் அவலக் குரல் மிகப் பயங்கரமாக எழவே, "சச்சு, அம்மா செத்துப் போவாளோ?" என்று கேட்டாள், கனகம்.

"மாட்டா, அம்பிப் பயல் பிறக்கப்போருன்" என்ருள் சச்சு.

"அம்பிப்பயல் பிறந்தப்புறம் அம்மா செத்துப்போனா, அம்பிப் பயலுக்கு அம்மா இருக்கமாட்டாளே?"

"அம்பிப் பயலுக்காக அம்மா செத்துப்போகமாட்டா" என்றாள் சச்சு.

இந்தப் பதில் கனகத்துக்கு மிகுந்த திருப்தியைத் தந்தது. சிறிது நேரத்தில் அவள் உணர்விழந்தாள்.

அதற்குப் பின்பும் சச்சுவால் தூங்க முடியவில்லை. இரவு பதினொரு மணிக்குமேல் 'ஐயோ, அம்மா' என்ற கூப்பாடு வலுத்தது. கிழவர்கூட வராண்டாவில் வந்து நின்று கொண்டார். அடிக்கொரு தரம் 'என்னடா என்னாச்சு?' என்ற குரல் மாடியிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தது. மீண்டும் டாக்டருக்கு போன் பண்ணினார் சபேசய்யர். சம்முகம் கடைத் தெருவுக்கும் வீட்டுக்குமாக ஓடிக் கொண்டிருந்தான். அறைக்குள் ஏக களேபரமாக இருந்தது. சபேசய்யர், சாத்தியிருந்த கதவு முன்னால் நின்றுகொண்டு; 'டாக்டர் டாக்டர்' என்று கூப்பிட்டார். டாக்டர் வெளியே வரவில்லை. கதவு திறக்கப்படவில்லை.

தாயின் வேதனைக் குரல் மனத்தைத் தாக்கியபொழுது, கண்ணீர் உகுத்தாள் சச்சு. தலையணையை வாயினுள் திணித்துக்கொண்டு, முகத்தைப் புதைத்தபடி தேம்பினாள். பின்னால் அவளும் சோர்ந்து நித்திரையில் ஆழ்ந்து போனாள்.

தாயின் துன்பக்குரல் அலைகள் தான் காலையில் எழுந்ததுமே மனத்தில் எதிரொலித்துக் கொண்டிருந்தன குழந்தைகளுக்கு. மூன்று பேரும் எழுந்து பாயில் உட்கார்ந்து, தாயின் கூக்குரல் கேட்கிறதா என்பதை முதலில் ஆராய்ந்து பார்த்துக் கொண்டார்கள். அப்பொழுது பச்சிளம் குழந்தையின் சிணுங்கல் கேட்டது! முகமெல்லாம் சிரிப்போடு ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். கண்களில் ஒளிகூடி, களை வழிந்தது முகத்தில்.

சச்சு, சாத்தியிருந்த அறைக் கதவை நோக்கி ஓடினாள். பங்கசமும் கனகமும் பின்னால் பாய்ந்தார்கள்.

வெங்கு எழுந்திருந்து தலைமாட்டில் அவிழ்த்துப் போட்டிருந்த இரட்டை மாடி பஸ்ஸை மீண்டும் அரைஞாணில் கட்டிக்கொண்டு, பாயசம் தயாராகி விட்டதா என்று பார்க்க அடுக்களைக்குச் சென்றான்.

அறைக்கதவு இலேசாகத் திறந்திருந்தது. சச்சு இடுக்கு வழியாகப் பார்த்தாள். குழந்தையின் கால்கள் தெரிந்தன. முக்காலியில் வைத்திருந்த 'தர்மாஸ் பிளாஸ்க்' குழந்தையின் முகத்தை மறைத்தது.

"அம்பிப் பாப்பா, அம்பிப் பாப்பா" என்று களிப்புடன் ஓசையெழாமல் கையைத் தட்டினாள் சச்சு. அவளுக்கு நிலைகொள்ளவில்லை. அவளை இடித்துத் தள்ளிக்கொண்டு பார்த்தாள் பங்கசம். கனகம் பார்த்துவிட்டு, "அம்பிப் பாப்பா கால் வெண்ணெய் கட்டி

யாட்டமா இருக்கும். ஐயோடி! எனக்குத் தொட்டுப் பாக்கணும்'' என்றாள்.

குழந்தைகள் ஆசை தீராமல் ஒருவரையொருவர் இடித்துத் தள்ளியபடி, மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

"யாருடீ அங்கே?" குரல் இடிபோல் முதுகில் பாயவே, திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். சபேசய்யர் நின்றுகொண்டிருந்தார்.

"கழுதைகளா, அங்கெ என்னுது எட்டி எட்டிப் பார்க்கிறேள்?" மூன்று பேருக்கும் வாய் கட்டிவிட்டது.

"என்னுதுடீ, என்னுது?"

"அம்பிப் பயலைப் பாக்கறோம்" என்றாள் பங்கசம்.

"அம்பிப்பயலைப் பாக்கறேளாக்கும்!" ஒரு இழுப்பு, ஒரு வலிப்பு. குழந்தைகளுக்குப் புரியவில்லை.

மூன்றும் தலையாட்டின.

"அம்பிப் பாப்பா, மண்ணுங்கட்டிப் பாப்பா, தெருப்புழுதிப் பாப்பா...போங்கோடி இங்கிருந்து."

மூன்றும் பின்கட்டை நோக்கித் தெறித்தன.

வெங்கு அடுக்களையில் நிலையை யொட்டி விசுப்பலகையை எடுத்துப் போட்டுக்கொண்டு நிர்வாணமாகப் பத்மாசனத்தில் அமர்ந்திருந்தான். இரட்டைமாடி பஸ், நிலைக்கு அந்தப் பக்கம் நின்றுகொண்டிருந்தது. இடுப்புக்கும் பஸ்ஸுக்குமான நூல்கயிறு அரையடி உயரத்தில் நிலைவாசலுக்குக் குறுக்கே பாலம் போட்டிருந்தது. செல்லம்மாள் ஒவ்வொரு தடவையும் கயிற்றைத் தாண்டியபடியே அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் போய்க்கொண்டிருந்தாள்.

சச்சு, பங்கசம், கனகம் மூன்று பேர்களும் முகத்தைத் தொங்கப் போட்டபடியே அடுக்களை வந்து சேர்ந்தார்கள்.

அவர்களைக் கண்டதும் "பாயசம் இன்னும் ஆகலை" என்றான் வெங்கு.

"மாமி, எங்களுக்கு அம்பிப் பாப்பாவை எடுத்துக் காட்ட மாட்டியா'' என்று கேட்டுக்கொண்டே மாமியின் முன்னால் சென்று நின்றாள் சச்சு. பங்கசமும், கனகமும் மாமியின் பக்கவாட்டில் வந்து நின்றார்கள்.

மாமி குழந்தைகளின் முகத்தைப் பார்த்தாள். அவள் கண்கள் நிரம்பின.

"அப்புறம் காட்டறேண்டி அம்மா. நீங்க மூணு பேரும் பஸ் தேச்சுட்டு வாங்கோ" என்றாள்.

குழந்தைகளுக்கு ஒன்றும் விளங்கவில்லை. காலையில் அவர்கள் முகத்தில் தோன்றிய பூரிப்பின் சாயலைக் கூட, இப்பொழுது காண முடியவில்லை. குழந்தைகள் படியிறங்கிக் கிணற்றடிக்குச் செல் வதைக் கண்டதும் மேலும் துக்கம் பொங்கிற்று மாமிக்கு.

வெங்குவுக்கும் ஒன்றும் சுவாரஸ்யப்படவில்லை. அவனும் கிளம்பிவிட்டான். சில நிமிஷங்களுக்கெல்லாம் இரட்டை மாடி பஸ் ஒட்டு மாவைச் சுற்றித் தொழுவத்தை நோக்கி ஓடிக்கொண் டிருந்தது.

செல்லம்மாள் தோசையும் பாலும் எடுத்துக்கொண்டு மாடிக் குச் சென்றாள்.

அப்பொழுது குஞ்சம்மா பல்தேய்த்துவிட்டு முகத்தைத் துடைத் துக் கொண்டிருந்தாள்.

"செல்லம், கோமதி எப்படியிருக்கா?" என்று கேட்டாள் குஞ்சம்மா.

"ஒண்ணுமில்லே, ஒண்ணுமில்லெ'' என்றாள் மாமி.

"அவளைப் பார்க்க மனஸு அடிச்சுக்கிறதுடி எனக்கு. செல்லம், என்ன ஜென்மமடீ இது? கீழே பெண் இடுப்பு வலியிலெ மாயறத் தெக்கூட மாடியைவிட்டு இறங்க முடியாத ஜென்மம்?"

"மனஸை எதுக்கு அலட்டிக்கிறேள்? இன்னிக்கு நேத்திக்கு ஏற்பட்ட விஷயமா இது? பத்து வருஷமா இந்த நாடகம்தானே நடக்கிறது? எதுக்கும் மத்யானம் கீழே வரத்தானே வரணும். அப்போ ரெண்டு நாழி கோமதி பக்கத்திலெ உட்கார்ந் துண்டுருங்கோ."

அன்று குஞ்சமாவுக்குக் குளி முறையானதால் கீழே வரவேண்டி யிருந்தது.

குஞ்சம்மாள் தோசையை விண்டு போட்டுக்கொண்டாள்.

"நேத்து 'டக்கு' வாங்கிப்போச்சு. ஏது இந்தப் பெண் எல்லோரையும் அனாதையாக்கிடுமோனு பயந்து போனேன்" என் றாள் செல்லம்மாள்.

"இவ்வளவு சிரமப்பட்டதுக்கு ஆண் குழந்தையாப் பிறந் திருந்தா அவளுக்காவது ஆறுதலாயிருந்திருக்கும்" என்றாள் குஞ்சம்மா.

"என்ன சேறது சொல்லுங்கோ? தாலோடு இப்போ அஞ்சாச்சு."

நீட்டிய கையில் பால் தம்ளரைக் கொடுத்தாள் செல்லம்மா. ஒரு மடக்குக் குடித்துவிட்டுத் தம்ளரை முக்காலியில் வைத்தாள் குஞ்சம்மா.

"போகப் போக நேத்து ரொம்ப சிரமப்பட்டுப் போச்சு. பேச்சு மூச்சில்லே, கூப்புட்டாக் கூப்பிட்டா பதிலில்லே. காலும் கையும் ஜில்லிட்டுப்போச்சு. கடேசியிலெ தன் போதமில்லாமல்தான் குழந்தை பிறந்தது. அரைமணி நேரம் கழிச்சு கண்ணை முழிச்சுப் பாத்தா; திருதிருனு முழிச்சா, ஆட்டுக்குட்டி மாதிரி. பக்கத்திலே போய், 'கோமதீ, என்னம்மா வேணும்? பெத்துப் பிழைச்சாய் போ'ன்னேன். காதோடெ, 'மாமி, என்ன குழந்தை?'னு கேட்டா. மாமி, நீங்களே சொல்லுங்கோ? நான் என்ன பதில் சொல்லுவேன்? எனக்கு அப்படியே தொண்டையை அடைச்சுண்டு நெஞ்சோடு பொருமல் வந்துடுத்து. ஐயோ இந்த ஒண்ணும் தெரியாத குழந்தையையுமா பாவி தெய்வம் இப்படிச் சோதிக்கணும்?''

குஞ்சம்மா கன்னத்தில் கண்ணீர் வழிந்தது. புடவைத் தலைப் பால் முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

"நீங்க வேறே மனசிலெ போட்டுக்காதேங்கோ; உங்க உடம்புக்குத் தாங்காது. பால் ஆறிப்போறது'' என்றாள் செல்லம்மா.

குஞ்சம்மாள் பால் தம்ளரை கையில் எடுத்துக் கொண்டாள்.

"இன்னிக்கு எல்லாருக்கும் கடுதாசி போட்டாகணுமே, ஒருத்தருக்கும் போடவேண்டாங்கறா கோமதி. அவளுக்கு அவமானமா இருக்குமாம். இந்தத் தடவையாவது சமத்தா ஒரு ஆண் குழந்தையைப் பெத்துண்டு வாடீனு சொல்லி யனுப்பிச்சாளாம் ஆம்படையான்காரன். 'ஏண்டி, இந்த வசையாவது எங்காத்துக்காரர் பெயர் போட முடியுமோடி? மனஸ் இரங்குமா தேவிக்கு?' என்று ரயில் நகர்ந்ததும் மாமியார்க்காரி கத்தினாளாம். பெண் குழந்தை பிறந்திருக்குனு தந்தி கிடைச்சதுமே 'இந்த மூதேவி முகத்திலேயே முழிக்க வேண்டாம்'னு தீர்மானிச்சாலும் தீர்மானிச்சுடுவர் அவர்' என்று சொல்லிக் கொண்டே 'ஓ' வென்று அழறா கோமதி...''

குஞ்சம்மா டக்கென்று தம்ளரை கீழே வைத்துவிட்டு இரண்டு காதையும் பொத்திக்கொண்டு. "செல்லம்மா, அப்படிச் சொல்லாதே, அப்படிச் சொல்லாதே. எனக்கு என்னமோ சேறது'' என்று கத்தினாள்.

குஞ்சம்மா முகத்தில் பன்னீர் தெளித்தமாதிரி வியர்த்துவிட்டது. காலும் கையும் பரந்தன. செல்லம்மா சரேலென்று தலையைப் பிடித்துக் கொண்டாள்.

"அப்படியே தலையணையில் சாச்சுடு செல்லம்மா" என்றாள் குஞ்சம்மா.

"போயும் போயும் உங்கள்ட்டெ வந்து சொல்றேன் பாருங்களேன், இந்த மூடத்துக்கு என்னிக்குத்தான் புத்தி வரப்போறதோ?

புத்திகெட்ட மூடம்'' என்று நெஞ்சில் கை வைத்தபடி தன்னைத் தானே நொந்துகொண்டாள் செல்லம்மா.

அரைமணி நேரம் குஞ்சம்மா பக்கத்தில் உட்கார்ந்துவிட்டுக் கீழே வந்தாள், செல்லம்மா.

செல்லம்மா, பின் வராண்டாவில் வந்ததும் வெங்கு கொல்லையில் நின்றுகொண்டு, ''மாமி, மாமி, மாடு செத்துப்போயுண்டிருக்கு'' என்று கத்தினான்.

செல்லம்மா தொழுவம் பக்கம் சென்றாள்.

மாடு படுத்தபடி காலைத் தரையில் 'பட்பட்'டென்று அடித்துக் கொண்டிருந்தது. கிழவர் முன்னால் உட்கார்ந்து முகத்தைக் தடவிக் கொடுத்துக்கொண்டிருந்தார். சம்முகம் பின்னால் நின்றுகொண் டிருந்தான்.

மூன்று பெண் குழந்தைகளும் சற்றுத் தொலையில் வரிசையாக முட்டுக்குத்தி உட்கார்ந்து கொண்டிருந்தனர். காலையில் அடைந்த ஏமாற்ற உணர்வுக்கு இந்தக் காட்சி இதம் கொடுத்தது.

"எழுந்திருந்து போங்கடி இங்கிருந்து" என்று கத்தினாள் மாமி.

"சும்மா இருக்கட்டும். குடி முழுகியா போகும்? காலா காலத் திலே எல்லாம் தெரிஞ்சுக்க வேண்டியதுதானே" என்றார் கிழவர்.

"இவரொருத்தர்" என்று சொல்லியபடி முகத்தை இழுத்துக் கொண்டே அடுக்களைக்குச் சென்றுவிட்டாள் மாமி.

குழந்தைகள் அங்கேயே உட்கார்ந்துகொண்டிருந்தன. வெங்கு மட்டும் கிழவர் பக்கம் வந்து நின்றுகொண்டிருந்தான்.

மாடு தலையைத் தூக்கி ஒரு தடவை அலறிற்று. கன்றின் முகம் வெளியே வந்துகொண்டிருந்தது.

"முகத்தைப் பாத்தா காளங்கன்னு மாதிரி இருக்கு" என்றான் சம்முகம்.

"வாயை மூடு, அபசகுனமா ஏதாவது உளறுதே. முகத்தைப் பாத்தாத் தெரியுமோ? மண்டூஸ், மண்டூஸ்'' என்றார் கிழவர்.

"ஒரு பார்வைக்கு அப்படிப் படுது" என்று இழுத்தான் சம்முகம்.

"நீர் ஒரு பார்வையும் பாக்க வேண்டாம். நான்தான் சொல் றேனே கிடாரிதான் போடும்னு. மேற்கொண்டு என்ன பார்வை வேண்டிருக்கு? மண்ணாப்போன பார்வை'' கிழவருக்கு ஆங்காரம் அடி வயிற்றிலிருந்து வந்தது.

மாடு படக்கென்று எழுந்து நின்று, இருபுறமும் பக்கவாட்டில் புரண்டது.

"ஹாவ், ஹாவ்" என்றான் சம்முகம்.

முகத்தைத் தடவிக் கொடுத்தவாறே, "ஹாவ், ஹாவ்" என்றார் கிழவர்.

மாடு மீண்டும் படுத்தது.

"தாத்தா, பசுவுக்கு வாலிலெ என்னுது தொங்கறது?" என்று கேட்டான் வெங்கு.

"கன்னு போடப்போறதுடா, கிடாரிக் கன்னு. கிடாரி பிறக்கும், உனக்கு பாலைக் கறந்து தொந்திக்கு விட்டுக்கலாம்டா, யோகம் தாண்டா பயலெ" என்றார் கிழவர்.

மாடு 'ம்பே' என்று பயங்கரமாக அலறிற்று. உடம்போடு ஒரு தடவை நெளிந்து புரண்டது. சில நிமிஷங்கள் இந்த அவஸ்தை.

"கன்னு விளுந்திட்டு" என்று கத்தினான் சம்முகம்.

"என்ன கன்னு?" என்று கேட்டுக்கொண்டே கிழவர் பின்பக்கம் வந்தார். அதே சமயம் மாடும் சட்டென்று எழுந்து மிகுந்த பரபரப்புடன் பின்புறம் திரும்பிக் கன்றை முகந்து பார்த்தது.

சம்முகம் வாலைத் தூக்கிப் பார்த்துவிட்டு, "கிடாரி" என்றான்.

"கிடாரி...கிடாரி" என்று கத்தினார் கிழவர்.

ஏமாற்றத்திலும் மனச் சோர்விலும் ஆழ்ந்திருந்த குழந்தைகள் கணப்பொழுதில் இந்த உத்ஸாகத்தை வாங்கிக்கொண்டன.

மூன்று பெண்களும் கையைத் தூக்கிக் குதித்தபடி, "கிடாரி, கிடாரி" என்று கத்தினர்.

வெங்கு ஒரு படி மேலே சென்று, "கிடாரிக்கு ஜே" என்று கோஷமெழுப்பினான். பெண் குழந்தைகளும் அதை ஏற்றுக்கொண்டார்கள்.

"கிடாரிக்கு ஜே!"

இந்த சந்தோஷச் செய்தியை அறிவிக்க அடுக்களையைப் பார்த்து விரைந்தார் கிழவர். அவசரத்தில் வேஷ்டி நெகிழ்ந்து விட்டது. அதை சரியாகக் கட்டிக்கொள்ளவும் பரபரப்பு இடங்கொடுக்கவில்லை. வயிற்றோடு துணியை அழுத்திப் பிடித்துக்கொண்டே, "செல்லம்மா கிடாரி, கிடாரி!" என்று கிழவர் கத்தினார்.

ஊர்வலம் கிணற்றடியைச் சுற்றிச் சென்றுகொண்டிருந்தது. கிணற்றடியில் துவைக்கப் போட்டிருந்த ஜம்பரையும் கையிலெடுத்துக்கொண்டு விசிறினான் வெங்கு. ஏக காலத்தில் நாலு புஜங்கள் வானத்தில் நிமிர்ந்தன.

"கிடாரிக்கு ஜே!"

கிழவர் தேன்கூடு பக்கம் வந்து, "குஞ்சம்மா, குஞ்சம்மா" என்று கூப்பிட்டார். சாளரம் திறந்தது. தலை முளைத்தது.

"கிடாரி!"

"அப்படியா!"

முகத்தில் முல்லை மலர்ந்தது.

வாசல் பக்கம் வந்தபொழுது சபேசய்யர் இல்லையென்பதை உணரவே, கோஷம் வலுத்தது.

பங்கசம் திடீரென்று, "கிடாரிக் கண்ணுக்கு ஜே" என்று கோஷத்தை விஸ்தரித்தாள்.

தொடர்ந்து, "கிடாரிக் கண்ணுக்கு ஜே" என்ற குரல்தான் எதிரொலித்தது.

கோமதியிடம் அறிவிக்க முடியாமல் போனதில் வருத்தம்தான் கிழவருக்கு. அவள் அசந்து தூங்கிக்கொண்டிருந்தாள்.

கிழவர் கொல்லைப்புறம் வந்தார்.

குழந்தைகளும் வீட்டைச்சுற்றிப் பின்பக்கம் வந்து சேர்ந்தார்கள்.

செல்லம்மா, பின் வராண்டாவில் நின்றபடி ஊர்வலம் வரும் அழகைக் கண்டு அகம் மகிழ்ந்துபோனாள். வெங்குவின் கை உதறலையும், முகபாவத்தையும் பார்த்து உடம்பு குலுங்கக் குலுங்கச் சிரித்தாள். அப்படியே படி இறங்கி வந்து அவனைக் கட்டிக்கொண்டு, "போதும்டா கண்ணு சத்தம் போட்டது. தொண்டை கட்டிக்கப் போறது" என்றாள்.

வெங்கு, மாமி முகத்தை ஏறிட்டுப் பார்த்து, "பாயசமாயாச்சோ?" என்று கேட்டான்.

"நன்னா கேட்டே போ. கிடாரி பிறந்திருக்கு. நான் வச்சுத் தரேன் உனக்கு" என்றாள் செல்லம்மா.

# கேவலம் ஒரு நாய்!

'புனிதன்'

சுத்தம் செய்யப்பட்ட தன் இரட்டைக் குழல் துப்பாக்கியைக் கட்டில் விளிம்பில் சாத்தி வைத்தான் துரை. தோட்டாக்களைச் சரி பார்ப்பதில் அவன் கவனம் பதிந்திருந்தது.

''கன்னியப்பா,'' என்று இடையில் குரல் கொடுத்தான்.

கூடாரத் திரையை விலக்கிக்கொண்டு குறவன் கன்னியப்பன் எட்டிப் பார்த்தான். சனப்பனூர் எஸ்டேட்டைச் சேர்ந்தவர்கள் கன்னியப்பனைத் துரைக்குத் துணையாக ஏற்பாடு செய்திருந்தார்கள். சேலத்துச் சீமானுன துரைக்கு அவர்கள் மிகவும் வேண்டியவர்கள். தங்கள் எஸ்டேட்டை அடுத்த காடு வேட்டைக்குத் தகுந்த இடம் என்று அவனுக்கு எத்தனையோ முறை எடுத்துச் சொல்லியிருந்தார்கள். இப்போதுதான் துரைக்கு இந்தப் பக்கம் வருவதற்கு ஒழிந்தது.

கன்னியப்பன் தயக்கத்துக்குக் காரணம் தெரிந்ததும் துரைக்குச் சற்றுப் பெருமையாக இருந்தது. அவன் கட்டிலுக்கு அடியிலே யிருந்த உயர்ந்த ஜாதி இளஞ்சிவப்பு நாய் அந்தக் குறவனை ஏறிட்டு நோக்கி நிமிர்ந்து நின்றது.

அதன் தலையை மெல்லத் தடவி விட்டுக்கொண்டு, ''இந்தக் காட்டுக்குள்ளே என்ன கிடைக்கும்?'' என்றான் துரை.

''உங்களைப் போலத்தான் போனமாதம் வந்த ஒருவர் சிறுத்தைப் புலி அடித்தார். கழுதைக் குறத்தி நிறைய மேய்கிறது. காட்டுப் பன்றிக் கூட்டம் ரொம்ப அதிகம். அப்புறம் குள்ள நரி—அதோ ஊளையிடுவது கேட்கவில்லை? நாங்கள் காடை, கவுதாரி முயல் அடிப்போம். மானும் கடமையும் கூட இருக்கிறது. மணிப்புறா பிலு பிலுவென்று திரியும்,'' என்று அடுக்கினான்.

துரை கைக் கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். ரேடியத்தால் மின்னிய எண்கள் பதினொன்றரை என்று காட்டின. வெளியே கும்மிருட்டு. தொலைவிலே கோட்டான் ஒன்று சுருதி சேர்த்துக் கொண்டிருந்தது. மழை அடங்கிய வேளையாதலால் சில் வண்டின் ரீங்காரமும் தவளைகளின் அலறலும் துணை சேர்ந்தன.

இருந்தாற் போலிருந்து திடீரென்று—என்ன பயங்கர வெடி!

''வேறு யாராவது வேட்டைக்கு வந்திருக்கிறார்களோ?'' என்று முகத்தைச் சுளித்தான் துரை.

வெடி வந்த திக்தில் பாய்ந்தோடத் துடித்த கன்னியப்பன், "கொஞ்சம் பொறுங்கள் முதலாளி! இல்லாவிட்டால் காட்டுப் பன்றி தப்பி ஓடிப்போகும்," என்று சொல்லிக்கொண்டே வெளியே பாய்ந்தான்.

அவன் பேச்சு வேடிக்கையாக மட்டுமல்ல, ஆவலைத் தூண்டுவதாகவும் இருந்தது துரைக்கு. அவன் ரோஸியைக் கூடக் கவனிக்காமல் கன்னியப்பனுடன் ஓடுகிறான். காட்டு மனிதன் என்றால் கன்னியப்பனுக்குத்தான் தகும். காக்கை முள்ளையும் ஜங்கம் புதர் வேல மரங்கள் எதையும் பொருட்படுத்தாமல் என்ன வேகமாய் ஓடுகிறான்! அவனுக்கு வழி காட்டுவதைப் போல் முன்னால் தாவியோடுகிறதே ஒரு நாய்! இவன் இருப்புக்கு வேட்டை நாய் வேறு?

துரை டார்ச் விளக்கை அடித்துப் பார்த்தான். விளக்கின் ஒளி எட்டும் தொலைவிலே ஒரு காட்டுப் பன்றி சுருண்டு சுருண்டு விழுந்து விழுந்து ஓடிக்கொண்டிருந்தது.

"கறுப்பா! விடாதே, பிடி," என்று கத்தினான் கன்னியப்பன்.

டார்ச் வெளிச்சத்தில் மருண்டு நிற்கும் குழி முயலையும் பொருட்படுத்தாமல் அந்தப் பன்றியைக் குறி வைத்துப் பாய்ந்தது அந்தப் பட்டி நாய். அடிபட்ட பன்றியை நகர வொட்டாமல் அது அழுத்திப் பிடிக்கவும் துரையும் குறவனும் அதன் அருகில் செல்லவும் சரியாக இருந்தது.

பன்றியின் தலைப்புறம் உருத் தெரியாமல் பிய்ந்து போய் ரத்த விளாறாகியிருந்தது. எப்படி இத்தனை முரட்டு ஜந்துவை இவ்வளவு கடுமையாகத் தாக்க முடியும் என்று வியந்தான் துரை. "ஏண்டா, யார் இதை இப்படிச் சுட்டது?"

கன்னியப்பன் மெல்லச் சிரித்தான். "இது நான் வைத்த வெடிதான் எசமான். மாங்கொட்டைக்குள்ளே இருக்கிற பருப்பை எடுத்து விட்டுக் கரிமருந்தைப்போட்டுக் கெட்டிக்கவேண்டும். வாசனைக்காக மேலே கொழுப்பை மூடி இறுக்கிவிட்டு இப்படி வயல் புறத்தில் வைப்பது வழக்கம். வயலைத் துவம்சம் செய்ய வரும் காட்டுப் பன்றி இதைக் கடித்தால் போதும். இந்தக் கதிதான்," என்று பெருமையுடன் கூறிவிட்டுத் தன் நாயைத் தட்டிக் கொடுத்தான்.

அதைத் துரை அருவருப்போடு பார்ப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை.

இந்த உலகத்தில் கறுப்பனைத் தவிர அவனுக்கு வேறு துணையே இல்லை. ஒரு முறை தன் உயிரையும் கொடுக்கத் துணிந்ததே அதை நினைத்துக் கொண்டால் இப்போது கூட அவன் மெய் சிலிர்த்தது. அதனுடைய துணிந்த வேலையால்தானே இப்போது அதன் வலது முன்னங்கால் ஊனமாக இழுத்து இழுத்துக்கொண்டு நடக்கும்படி ஆயிற்று.

அன்று பகல் வேளைதான். அடர்ந்த நுணா மரத்தில் கவுதாரிக்குக் கண்ணி விரித்தான் கன்னியப்பன். ஈச்சம் புதரை அடுத்துத் தாழ வளர்ந்திருந்தது அந்த மரம். மறைந்திருக்கும் அபாயத்தை அதனால் தான் உணரவில்லை அவன். புதர் மறைவிலிருந்து குபீரென்று அவன் மேல் பாய்ந்துவிட்டது ஒரு சிறுத்தைப் புலி.

"கறுப்பா!" என்று அலறிக்கொண்டு மரத்திலிருந்து விழுந்தான் கன்னியப்பன்.

அடுத்த விநாடி—அந்தப் பட்டி நாய்க்குத்தான் என்ன துணிச்சலோ—அந்தச் சிறுத்தையுடன் சரிக்குச் சரியாக நின்றது. கன்னியப்பன் கையில் குத்துக்கோல் இருந்ததோ, கறுப்பன் பிழைத்ததோ! சிறுத்தைப் புலியின் தோலுக்குக் கிடைத்த பணமெல்லாம் கறுப்பனுக்கும் தனக்கும் ஏற்பட்ட காயங்களுக்கு மருந்து போடவே சரியாக இருந்தது...

கன்னியப்பன் அதன் கழுத்தைக் கட்டிப் பிடித்துக்கொண்டு முகத்தோடு முகம் வைத்துக்கொண்டான்.

"சரிதான், கொஞ்சியது போதும். பன்றியை இழுத்துப் போட்டுவிட்டு வாடா. அங்கே ரோஸிக்கு சூப் வைத்தானா, எலும்பு போட்டானா போய்ப் பார்க்கணும்," என்று முன்னால் விரைந்தான் துரை.

கன்னியப்பன் எல்லாமான தன் நாயை இழுத்துக்கொண்டு முன்னே நடந்தான்.

சினப்பனூர் எஸ்டேட் பாக்குத் தோப்புக் காட்சி கண்கொள்ளாக் காட்சி. ஒரு பாக்கு மரத்தில் ஏறுகிறவன் பாக்குப் பழத்தைப் பிய்த்து எறிந்ததும் அதன் உச்சியிலிருந்தே அடுத்த மரத்தில் தொத்திக்கொள்வதும், அப்படியே எல்லா மரங்களிலும் தாவுவதும் வேடிக்கையாக இருந்தது. அதைக் கவனித்துக்கொண்டே மேலே நோக்கியபோது கூட்டமாக வானத்தில் நீந்தும் மணிப் புறுக்கள் துரையின் கண்ணைக் குத்தின.

இரட்டைக் குழல் துப்பாக்கி மேலே உயர்த்தப் பட்டது. ஒரே தோட்டாதான் செலவு. குபீரென்று பல புறுக்கள் உதிர்ந்தன.

ரோஸி—துரையின் உயர்ந்த ஜாதி நாய் அவற்றைக் கௌவி வரப் பாய்ந்தது. கன்னியப்பனின் கறுப்பனும் ஒத்தாசைக்குப் பாய்ந்தது. அதைப் பார்த்ததும் துரை பாய்ந்தான் அதை நோக்கி. துப்பாக்கியைத் திருப்பிக்கொண்டு அதன் விலாப் புறத்தைத் தட்டிவிட்டான். "இந்த வங்கு பிடித்த நாய்க்குப் பக்கத்தில் ரோஸி போனால் அதற்கும் தொத்திக்கொள்ளும்," என்றான் கடுமையாக.

அடிபட்ட கறுப்பன் 'வாழ் ஊழ்' என்று கத்திக்கொண்டே துரையின் காலைச் சுற்றிக்கொண்டது. கன்னியப்பன் தலை குனிந்து அதைத் தட்டிக்கொடுத்து இழுத்துச் சென்றான்.

சுடப்பட்ட புருக்களுடன் கூடாரத்துக்குச் சென்றபோது அவனுடைய வேலைக்காரன் முதலில் அந்த ரோஸியைத்தான் கவனித்தான். பீங்கான் கோப்பையில் கமகமக்கும் உணவு வகைகள். அதைப் பார்த்து ஒதுங்கி நின்றான் கன்னியப்பன்.

பரிமாறிய உணவில் பாதியைக்கூடத் தின்றிருக்காது ரோஸி. முன்னங் காலை ஊன்றி உடலைப் பின்புறம் நெளித்து வளைத்து உடலைச் சிலுப்பிக்கொண்டது. அத்துடன் பின்னங் கால்களால் மண்ணைப் பிருண்டி தன் சாப்பாட்டுத் தட்டில் தள்ளியது. கன்னியப்பன் மனம் கேட்காமல், "கறுப்பன் அதை நன்றாகத் தின்னும் எசமான். அந்த மிச்சத்தை எடுத்துக்கொள்ளட்டுமா எசமான்?" என்று அஞ்சி அஞ்சிக் கேட்டான் துரையிடம்.

துரை உதட்டுக் கோணலில் ஓர் அலட்சியச் சிரிப்பைச் சிந்திக்கொண்டு, "போடா, அசல் புல்டாக் வகையில்லையா உன் நாய்! அதற்கு இந்த மாதிரி சாப்பாடு இல்லாமல் குறைவாயிருக்கிறதோ?" என்று எழுந்து போய்விட்டான் படுத்துக்கொள்ள.

கூடாரத்தின் மூலையொன்றில் கட்டப்பட்டிருந்த கறுப்பன் தனக்குள்ளேயே ஊளையிட்டுக்கொண்டிருந்தது.

கூன் மூடித்தனமாய் நேற்றுக் குறவனுடன் ஓடியது எத்தனை தவறாகப் போய்விட்டது! துரை காலிலும் கைப்புறத்திலும் ஏற்பட்டிருந்த சிராய்ப்புகளுக்குக் களிம்பு போட்டுக்கொண்டிருந்தான். அவன் உடம்பில் உண்டான எரிச்சல் மனத்திலும் உண்டாயிற்று.

"டேய் கன்னியப்பா!" என்று அதட்டினான்.

கூடாரத் திரையை ஒதுக்கிக்கொண்டு கன்னியப்பன் எட்டிப் பார்த்தான். "எஜமான்!"

கட்டில் விளிம்பில் சாய்த்து வைத்திருந்த இரட்டைக் குழல் துப்பாக்கியை எடுத்து மடக்கித் தோட்டாக்களைச் செருகிக்கொண்டே பேசினான். "முதலில் என் துப்பாக்கிக்கு ஒரு காட்டுப் பன்றிதான் இரையாக வேண்டும். அது இருக்கிற இடமாகப் பார்த்து அழைத்துப் போ."

கூனிக் குறுகி நின்ற கன்னியப்பன், "ஐயா கோபித்துக்கொள்ளக் கூடாது. இந்தத் துப்பாக்கிக் குண்டுக்கு மசியக்கூடியதல்ல அந்த ஜாதி. தப்பியோடி விடும்," என்றான்.

தன் வேட்டைத் திறத்துக்கு விடும் சவாலாகத்தான் அதை நினைத்தான் துரை. "அதையும் பார்த்துவிடுகிறேன். கமான் ரோஸி," என்று தன் ஜாதி நாயையும் இழுத்துக்கொண்டு துப்பாக்கியைத் தோளில் மாட்டிக்கொண்டு கிளம்பினான்.

கன்னியப்பனுக்குப் பின்னே அவனுடைய கறுப்பனும் வந்தது.

தென்னந் தோப்புக்குள் நுழைந்தபோது திடீரென்று ஒரு நெற்றுத் தேங்காய் முன்னே விழுந்தது. கொஞ்சம் மிஞ்சியிருந்தால் துரையின் தலையே பிளந்திருக்கும். அவன் ஆத்திரத்தோடு மேலே நிமிர்ந்தான். தேங்காயைத் தள்ளிவிட்ட மந்தி இளித்துக் காட்டிக் குதித்தது. விரைந்து எடுத்தான் வேட்டைத் துப்பாக்கியை.

குறவன் தடுத்து நிறுத்தி, "அதை ஏதாவது செய்தால் ஊர்க்காரர்கள் சும்மா விடமாட்டார்கள் பண்ணைக்காரரை," என்று எச்சரித்தான்.

சனப்பனூர் மலைக் காட்டு விளிம்பைத் தொட்டு நடந்தார்கள் இருவரும். தன் கால் பக்கம் கறுப்பன் வரும்போதெல்லாம் துரை பூட்ஸ்காலால் தள்ளிவிட்டுக்கொண்டே வந்தான். கறுப்பன் அதைப் பொருட்படுத்தாமல் கம்பீரமாக முன்னேறிக்கொண்டிருந்தது.

கானகத்தின் அடர்ந்த பகுதி. கடும் வெயிலாகத்தான் இருந்தது. அதை யார் கவனிக்கிறார்கள்? தரையெல்லாம் அளைந்தெடுக்கப்பட்டுக் கொட்டிக் கிழங்கும் காட்டு வள்ளியும் கெல்லியெடுக்கப்பட்ட அடையாளம் தென்பட்டது. "இங்கேதான் எங்கேயாவது இருக்கும் பன்றி," என்றான் கன்னியப்பன்.

உடனே தன் துப்பாக்கியைச் சரிப்படுத்திக்கொண்டான் துரை.

"போடா கறுப்பா, பார்," என்று கன்னியப்பன் தட்டிவிட்டான் நாயை.

அங்கிருந்த புதர்களையெல்லாம் இடமறிந்து வைத்திருந்த கறுப்பன் காக்கை முள் புதர் இடுக்கில் தலையைவிட்டுப் பார்த்தது. மறுகணம் வாள் என்று குரைத்துக் குதித்து எகிறியது. நுணுக்கமறிந்த கன்னியப்பன் தன் குத்துக்கோலை அந்த இடத்தில் விட்டு நெம்பினான். வில்லிலிருந்து விடுபட்ட அம்பு போல் குபீரென்று அந்த அடர்ந்த புதரினுள்ளிருந்து சீறி வந்தது ஒரு காட்டுப் பன்றி.

ஆகா! கறுப்பன்தான் அப்போது எத்தனை நேர்த்தியாக இடைவெட்டி அதன் கவனத்தைத் திருப்பியது! இப்பொழுது குறவனை விட்டுவிட்டு ஆங்காரத்துடன் கறுப்பன் பக்கமாகத் திரும்பிக்கொண்டது அந்தக் காட்டுப் பன்றி. கன்னியப்பனுக்குப் பக்கத்திலேயே ஒதுங்கிக்கொண்டு இந்தச் சண்டையைத் திகைப்போடு நோக்கியபடி நின்றுவிட்டது ரோஸி. பங்களா வாயிலுக்கு அழகு செய்யும் அதற்கு இத்தகைய பயங்கர அனுபவம் ஏற்பட்டதில்லை, பாவம்!

கன்னியப்பன் தன் குத்துக்கோலை ஓங்கினான். தொலைவிலிருந்து துரை கத்தினான். "டேய், நீ சும்மா இரு."

அவனுடைய துப்பாக்கி பன்றியைக் குறி பார்க்கும்போது கன்னியப்பன் பதறினான்: ''சாமி, நாய் ஜாக்கிரதை.''

துப்பாக்கி பயங்கரமாக வெடித்தது. காட்டுப்பன்றி துள்ளிய வேகத்தில் அதன் தோலை மட்டும்தான் உரசிக்கொண்டு போக முடிந்தது அந்தக் குண்டால். பன்றி தெறித்தோடும் திக்கில் படீரென்று மீண்டும் வெடி. நிச்சயம் அடிபட்டிருக்க வேண்டும். ஆனால் இத்தனை கடுவேகத்துடனா பாயும் ஒரு பன்றி! மானுக்கு இளைத்ததில்லை அதன் வேகம்,

''கறுப்பா, விடாதே, பிடி!''

குறவன் குரல் கேட்டதும் கறுப்பனின் பாய்ச்சல் இன்னும் அதிகமாயிற்று. அந்தப் பன்றியுடனே சென்று மறைந்தது அது.

ரோஸி வாலைக் குழைத்துக்கொண்டு துரையின் அருகில் வந்தது. தன் வீரத்துக்குச் சரியான பாராட்டுக் கொடுக்கிறது அது என்ற எண்ணத்தில் அதைத் தட்டிக் கொடுத்தான் துரை. உடனே அருகிலிருந்த புதரை நோக்கிப் பாய்ந்தது. தரையோடு ஒட்டிக் கொண்டு நகர்ந்த காடையின்மேல்தான் அப்படித் தாவியது. வெற்றி தான். அது கௌவிக்கொண்டு வந்து காட்டிய காடையைப் பார்த்துப் பூரித்துப் போனான் துரை.

அன்றைய வேட்டையை முடித்துக்கொண்டு திரும்பும்போது நடுப்பகல் சாப்பாட்டு நேரமும் மிஞ்சிவிட்டது. சமையற்காரனைப் பரிமாறச் சொல்லிவிட்டு ரோஸியுடன் கொஞ்சம் விளையாடத் துவங்கினான் துரை. அவன் வாயில் ரொட்டித் துண்டைக் கௌவிக் கொண்டு நிற்பதும் ரோஸி தாவிப் பாய்ந்து அதைக் கௌவிப் பறிப்பதுமாய் இருந்தனர். பரிமாறிவிட்டு வந்த சமையல்காரன், அவர்களைக் கூப்பிடவும் அஞ்சி, கூடார வாசலிலேயே நின்றான்.

கன்னியப்பனுக்கு இந்தப் பக்கத்திலேயே நாட்டமில்லை. தன்னுடைய கறுப்பன் சென்ற திசையையே பார்த்துக்கொண்டிருந்தான்.

கையிலிருந்த ரொட்டித் துண்டுகளெல்லாம் தீர்ந்த பின்னர்தான் அருகிலிருந்த பலாமரத் தண்டில் சாய்த்து வைத்திருந்த துப்பாக்கியைத் தூக்கிக்கொண்டு உள்ளே திரும்பினான் துரை.

அப்போதுதான் உற்சாகத்தோடு குரைத்துக் கொண்டே கறுப்பனும் அங்கு வந்தது. அந்தக் குரைப்பைக் கேட்டுக் குறவன் அருகில் வந்தான் துரை. பாய்ந்து வந்த கறுப்பன் அவர்கள் இருவர் கால்களையும் பொதுவாகச் சுற்றிச் சுற்றி வந்தது. அதன் வாய்ப்புறம் உடம்பெல்லாம் ஒரே ரத்தச் சேறு. காட்டுப் பன்றியை வெற்றி கொண்ட எக்களிப்பிலே துரையின் மேலேயும் விழுந்து புரண்டது.

"எனக்குத் தெரியும் ஐயா. என் நாய் அதை அடித்துப் போட்டு விட்டுத்தான் திரும்பும்" என்றான் குறவன் பெருமையோடு.

கறுப்பன் தன் முகத்திலிருந்த கருஞ் சிவப்பான ரத்தக் கறையைத் துரையின் வெள்ளைச் சட்டையில் அப்பியதோடு மட்டுமல்லாமல், அவனுடைய உறையிட்ட பூட்சையும் கௌவியது. துரையின் அருவருப்பு மீறி ஆத்திரம் உடைபடவே காலால் ஓங்கி உதைத்து விட்டான் கறுப்பனை. அவனுக்குள் புகைந்துகொண்டிருந்த குரோதம் அப்படிப் பற்றிக்கொண்டது.

ரத்த வெறி தீராத கறுப்பன் குப்பென்று அவன் மேல் பாய்ந்தது.

திட்டமிட்டு வைத்தது போல அடுத்த கணம் அவனுடைய துப்பாக்கி கறுப்பனுக்குக் குறி வைத்துவிட்டது.

"சாமி... சாமி! ஐயோ, கறுப்பா!" என்ற குறவனின் அலறலுக்கிடையே வெடித்துவிட்டது அது.

தன் காலுக்கடியில் ரத்தம் கக்கிக்கொண்டு சுருண்டு விழுந்த கறுப்பனை மீண்டும் உதைத்துத் தள்ளினான் துரை. "போடா பெரிய நாயைக் கண்டுவிட்டான்! தூக்கி எறிந்துவிட்டு வா. ராத்திரிக்குப் பெரிய வேட்டைக்குப் போகவேண்டும். ஒரு சிறுத்தைப் புலியாவது சுட வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே கையலம்பத் தண்ணீர் கேட்டான் அவன்.

மறு நாள் காலையில்தான் குறவனைச் சந்திக்க முடிந்தது.

துரை தன் ரோஸிக்குச் சோப்புப் போட்டுக் குளிப்பாட்டி விட்டு அப்போதுதான் பௌடர் போட்டுக்கொண்டிருந்தான்.

"ஏண்டா ராத்திரி வரவில்லை?" என்று அதட்டினான் துரை.

"இல்லை சாமி, அந்தக் காட்டுப் பன்றியை இழுத்துக்கொண்டு வந்து......" என்று கைகளைப் பிசைந்துகொண்டான்.

"போடு சக்கை! ராத்திரியெல்லாம் அமர்க்களமா?" என்றான் துரை, உற்சாகமாகத் தன் ரோஸியின் கால்களை உருவி விட்டுக் கொண்டே.

குறவன் வறண்ட சிரிப்புச் சிரித்தான்.

"டேய், என்னடா இன்னும் ஆகவில்லை!" என்று உள் பக்கம் திரும்பி இரைந்தான் துரை.

"இதோ, கொண்டு வந்துவிட்டேன் சார்" என்று பீங்கான் தட்டில் ரோஸிக்கு ஆகாரம் கொண்டுவந்து வைத்தான் சமையல் காரன்.

ரோஸி இப்போது அந்தத் தட்டைவிட்டு விலகிக் குறவனையே மோப்பம் பிடித்துச் சுற்றிச் சுற்றி வந்தது. அவன் சுருட்டி வைத்திருந்த மடிப்பக்கமாகத் தாவியது.

''என்னடா வைத்திருக்கிறாய்?'' என்றான் துரை நெற்றியைச் சுருக்கிக்கொண்டு.

''வேண்டாம் சாமி. இது ஒரு...''

''சும்மா சொல்லு.''

''ஒன்றுமில்லை. காட்டுப் பன்றியின் ஈல்லீரல். குறுப்பனுக்கு இது என்றால் ரொம்ப இஷ்டம்,'' என்று கருநீலத்தில் கைப்பிடி அளவிருந்த ஈரலை எடுத்துக் காட்டினான்.

ரோஸி அதன்மேல் தாவியது.

''சரி சரி, அதைக் கொடு அதற்கு!''

''உங்களுக்கில்லாதது எனக்கு எதற்கு சாமி?'' என்று ரோஸியின் பீங்கான் தட்டில் அதைக் கொண்டுபோய் வைத்தான் குறவன்.

ரோஸி ஆவலோடு பாய்ந்து சென்று அதைக் கௌவியது. வெறியுடன் ஒரு கடி—

அடுத்த கணம் அந்தப் பிராந்தியமே அதிரும்படியான வெடி! அங்கு எழுந்த புகை அடங்கியதும் கண்ணைக் கசக்கிக்கொண்டு பார்த்தான் துரை. அந்தப் பீங்கான் தட்டு சில்லுச் சில்லாகப் போயிருந்தது.

ரோஸி—ஐயோ! அதன் தலையையே காணோம்!

கால்கள் லேசாக அசைந்தன. அதற்கு அருகிலே வந்து நின்றவன் கன்னியப்பன்தான்.

''இதை நீங்கள் தூக்கி எறிகிறீர்களா, நான் தூக்கி எறியட்டுமா சாமி?'' அந்தக் குறவன்தான் கேட்டான்.

அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் துரை.

அந்த வெறிச் சிரிப்பு—அந்த முகத்தில் இதற்கு முன் இவ்வளவு கொடூரமானதை அவன் பார்த்ததேயில்லை.

# ஜவாலை

வெ. ரதாகிருஷ்ணன்

அன்று பௌர்ணமியல்ல, அதற்கு முந்தின நாள். நிறைவு பெருத நிலாவின் ஒளி அந்தி இருளை விரட்டிவிட்டு உலகத்தை வியாபித்துக் கொண்டிருந்தது. அதன் அமுத கிரணங்கள் பரந்த கடலின்மீது படியும்போது இன்பலாகிரியால் உணர்ச்சி வசப்பட்டு அந்தக் கருநீலக் கடல் தன் உடலை அசைத்து நெளிந்தது. அந்த அசைவின் நெளிப்பில் எழுந்த அலைகள் கரையை நோக்கித் தவழ்ந்து வரும்போது கடலானது கண்ணைப் பறிக்கும் வெள்ளிக் குழம்பைக் கொப்புளித்துக் கொண்டிருப்பதுபோன்ற ஒரு பிரமையை உண்டாக்கியது.

டாக்ஸியை ஒரு ஓரமாக நிறுத்திவிட்டுத் தன் தொழிலையும் மறந்து வேலாயுதம் எதிரே விரிந்து கிடந்த நீலக்கடலையும் அதன் கரையில் அமர்ந்து தங்கள் கவலைகளையும், உடல் களைப்பையும் தணித்துக் கொண்டிருந்த மனிதக் கூட்டத்தையும் நினைத்துப் பார்த்தான். ஆழ்கடலுக்கும் மனித உள்ளத்துக்கும் ஏதோ ஒரு தொடர்பு நீண்ட காலமாக இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் கவிஞர்களும், கதாசிரியர்களும் மனித நெஞ்சத்தை ஏன் கடலின் ஆழத்துடன் ஒப்பிட வேண்டும்? அதிருக்கட்டும், இந்த அலைகள் தாம் ஏன் மாலை நேரத்தில் அவற்றின் கரையில் ஜனங்கள் வந்து அமரும்போது குதித்துக் குதித்துக் கும்மாளம் போட வேண்டும்? எதற்காக அவை இப்படி 'ஹோ'வென்று கோஷமிடுகின்றன? தன் நெஞ்சின் ஆழத்தில் புதைந்து கிடக்கும் எந்த ரகசியத்தைக் கூற இப்படித் துடிக்கின்றன? ஆம்; அது வெறும் ரகசியமல்ல, ரகசியத்தின் சுமை! அந்தப் பெரும் சுமையைத் தாங்க முடியாமல்தான் அவை இப்படி வேதனையுடன் தவிக்கின்றன. எத்தனை பேர்கள் எத்தனை வருஷங்களாக இந்தக் கரையில் நின்றுகொண்டு தங்கள் மகிழ்ச்சியையும், அயர்ச்சியையும், கண்ணீரையும் வெளியிட்டிருப்பார்கள்! மைந்தனைப் பறிகொடுத்த தந்தையின் வேதனையையும், வீட்டில் நாலு பேர் முன்னால் பேச வெட்கப்பட்டுக்கொண்டு இங்கு வந்து தங்கள் உள்ளக் காதலையும், ஆசையையும், அன்பையும் போட்டி போட்டுக் கொண்டு கிடைத்த அவகாசத்தில் பரிமாறிக்கொள்ளும் இளம் தம்பதிகளின் சுவையான கட்டுரைகளையும் இக்கடல் கேட்டிருக்கும். வாழ்க்கையில் உணர்ச்சி வசப்பட்டு ஏமாற்றமடைந்த உள்ளங்களின் ஆற்றாமை, வேலை கிடைக்காமல் அலைபவர்களின் குமுறல்... இதுமட்டுமா? மானிடப் பிறவியின் சில பயங்கரச் செயல்களைக்கூட அது பார்த்திருக்கும்!

"டா...க்...ஸி!"

வேலாயுதம் திரும்பிப் பார்த்தான். அவன் நிறுத்தியிருந்த டாக்ஸியின் அருகே இருவர் நின்றுகொண்டிருப்பதையும் தன்னை அழைத்தது அந்த இருவரில் ஒரு பெண் என்பதையும் தெரிந்துகொண்டான். வேலு அருகில் வந்ததும் கதவைத் திறந்துகொண்டு அந்த இளைஞனும் யுவதியும் பின் ஸீட்டில் ஒருவர்மேல் ஒருவர் விழாத குறையாக ஏறி அமர்ந்து கொண்டனர். அப்போது டாக்ஸி ஒரு முறை பலமாகக் குலுங்கியது. மீட்டரைப் போட்டுவிட்டு வண்டியைக் கிளப்புவதற்குள் உள்ளே அமர்ந்திருப்பவர்களை ஒரு 'நோட்டம்' விட்டான் வேலு. அவர்கள் அவனுக்குப் பரிச்சயமானவர்கள்தான். ஆனால் அவர்களுக்கு அவனைத் தெரியாது. தொழிலாளிக்கும் முதலாளிக்கும் உள்ள உறவு இப்படித்தானே இருக்கிறது?

"கிதர் ஜானேகா, சாஹப், மாதுங்கா?" என்று அவன் கேட்டதும், "ஆமாம்!" என்ற பதில் சற்று ஆச்சரியம் கலந்து வந்தது. அத்துடன், "சீக்கிரம்! வேகமாக விடு!" என்று கூறிய அந்த யுவதியின் பதற்றக் குரலும் கலந்துகொண்டது.

கொஞ்ச நேரத்துக்கு அவர்கள் பெரிதாக விடும் பெருமூச்சு மட்டுமே கேட்டது. பிறகு அவர்கள் பேசிக்கொள்ள ஆரம்பித்தார்கள். அழகு கொழிக்கும் அந்த வனிதையின் அன்பு ஸ்பரிசம் அந்த ஆடவன்மீது பட்டது. தலைக்குமேல் மாட்டியிருந்த நீண்ட சதுரக் கண்ணாடியில் இக் காட்சியைக் கண்டபோது, அடிக்கடி அந்த நாரீமணி தன் செம்பவழ உதட்டைத் திறந்து, "எனக்கென்னமோ பயமாக இருக்கிறது!" என்று பீதி கலந்த குரலில் திருப்பித் திருப்பி மிழற்றுவதும் அதற்கு அந்த வாலிபன், "இதற்கெல்லாம் கவலைப்பட்டால் எப்படி? வீணாகப் பயந்து சாகாதே, விஜயா!" என்று கீறல் விழுந்த இசைத்தட்டாக மாறிப் பதில் அளிப்பதும் வேலுவுக்குத் திகைப்பாகவும், வேடிக்கையாகவும் இருந்தது. 'எதைக் கண்டு இவர்கள் பயப்பட வேண்டும்? எதற்காக இவர்கள் கவலைப்பட வேண்டும்?' என்று அவனுக்கு விளங்கவில்லை. என்றாலும் ஒரு மாதிரி விளங்கத்தான் செய்தது. ஏனென்றால் அவனுக்கு அவர்களைத் தெரியும்.

வேலு தன் டாக்ஸியில் எத்தனையோ தடவைகள் இதே நேரத்தில் இங்கிருந்து அவர்களை மாதுங்காவுக்கு ஏற்றிச் சென்றிருக்கிறான். முதன் முதலில் இவ்விருவரையும் சந்தித்தபோது வசீகரம் பொருந்திய இந்த ஜோடி அவன் மனத்தில் ஒரு மானஸீகத் திருப்தியை ஏற்படுத்தியது. "இப்பெண்ணுக்கு இந்த ஆசாமிதான் கணவனாக வாய்க்க வேண்டும். இல்லாவிட்டால் பிரம்மா மிகுந்த பிரயாசையுடன் செய்த இந்த அற்புத சிருஷ்டி வீண்!" என்று எண்ணினான். என்றுமே உள்ளத்தில் தோன்றிய முதல் அபிப்பிராயம் வைரத்தை விட உறுதி வாய்ந்ததல்லவா? சிருஷ்டி கர்த்தாவும், கால தேவனும் கூர்ந்து நோக்கி ஒவ்வொரு அங்கத்தையும் ஆராய்ந்தறிந்து

அமைத்து மலரின் மென்மையையும் பால் நிலவின் தண்மையையும் கொண்ட கலவை பூசி, வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் நோக்கத்துடன் இந்தச் சுந்தரியைப் பூலோகத்துக்கு அனுப்பியிருக்க வேண்டும்! அவளைப் பார்க்கும்போதெல்லாம் சிவந்த எல்லைக்குள் தாழம்பூ நிறத்தில் ஒளிரும் விளக்கின் சுடர்தான் வேலுவின் கண்முன் தோன்றும். அந்த அழகில் அச்சம் தரும் ஒரு தீவிர சக்தி ஜ்வாலை விட்டுக் கொண்டிருந்தது. கண்ணைப் பறிக்கும் மின்னலின் வெட்டு எவ்வளவு தான் ரம்மியமாக இருந்தாலும் கண்ணிமைக்காமல் பார்க்க வேண்டும் என்ற துணிவு மட்டும் நமக்கு வருவதில்லையல்லவா? அதனால் அந்தப் பெண்ணை நோக்கும்போதெல்லாம, எண்ணும்போதெல்லாம் தூய்மையான, பயமும் பவ்யமும் கலந்த ஒரு உணர்ச்சி வேலுவின் மனத்தில் உண்டாவது வழக்கம். பார்த்தவுடன் இப்படிப்பட்ட புனிதமான உணர்ச்சியைத் தூண்டிவிட்ட ஒரே பெண் நாளதுவரை இவள்தான். அப்படியானால் அவள் எவ்வளவு நல்லவளாக யிருக்க வேண்டும்! அவளது நெஞ்சில் கிளர்ந்த காதல் எத்தகைய சக்தி வாய்ந்ததாக இருக்கவேண்டும்! அவள் வாயிலிருந்து பிறக்கும் வாக்கு இனிமையாகத்தானே இருக்க முடியும்? கொள்ளை அழகும், குன்றுபோல் குணமும் உடைய இந்தப் பெண்ணின் பரிபூரண அன்பைப் பெற்றது அந்த இளைஞனின் பூர்வ ஜன்மம் என்று ஒன்று உண்டானால் அதில் செய்த தவத்தின் பயனாகவே இருக்க வேண்டும்!

தாதர் சர்க்கிளில் வளைந்து திரும்பி நீண்டு கிடந்த வின்ஸன்ட் ரோடில் வழுக்கி விழுந்துவிடும் வேகத்தில் டாக்ஸி ஓடியது. டாக்ஸிக்குள் நிலவியிருந்த அமைதி கசப்பு மருந்தைக் குடிப்பதுபோ லிருந்தது. அவ்விருவரும் பேசவேண்டியதை யெல்லாம் பேசித் தீர்த்திருக்க வேண்டும். ஆனால் காதல் நெஞ்சம் இந்த உலகத்தில் புத்தம் புதிய கற்பனைகள் வற்றாத ஊற்றுப்போல் உதிக்கும் இடம். அதிக நேர மௌனத்துக்கு அங்கு இடம் கிடையாது. இது அநுபவ வாக்காக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் இதோ இவர்கள் திரும்பவும் பேச ஆரம்பித்திருப்பார்களா?

''விஜயா! இதோ பார், நான் இத்தனை நேரம் உன்னிடம் கூறியதெல்லாம் நினைவிலிருக்கட்டும். இதைப்பற்றி நாம் தினமும் பேசியிருக்கிறோம். அதனால் புதிதாக யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. பயந்து பயந்து நாம் சந்தித்துக் கொள்வதில் சந்தோஷம் இருக்கிறது என்று நீ நினைக்கிறாயா? இந்த வேதனையிலிருந்தும் பயத்திலிருந்தும் விடுபடுவதற்குள்ள திட்டத்தைத்தான்......!''

''உஸ்......அதற்குமேல் நீங்கள் பேச வேண்டாம். நான்தான் 'சரி'யென்று அப்பொழுதே சொல்லிவிட்டேனே. என்றாலும் ஏனோ என் உள்ளம் நடுங்குகிறது.''

''மறுபடியும் சொல்லுகிறேன், விஜி, இப்படி நடுங்கிச் சாவதில் அர்த்தமில்லை. நீ செய்யும் காரியத்தினால் துரோகம் இழைப்பதாக அந்தராத்மா இடித்துக் காட்டினால் நீ தங்கிவிடலாம். ஆனால்......

அப்படித் தங்கிவிட்டால்...... தங்கிவிட்டால் என் கதி? விஜி, நீ தினமும் பிரிந்து செல்லும்போது என் மனம் எத்தகைய சித்திர வதைக்கு ஆளாகிறது, தெரியுமா? அந்த அவஸ்தையை நிரந்தர மாக்கி விடாதே, விஜயா!'' கம்பீரமாகத் தோன்றிய அந்த ஆணின் குரலிலும் ஒரு இளக்கம். ஐயோ! காதல் இன்பத்தைக் கொடுக்கும் உணர்ச்சியா? இல்லை, சுத்தப் பொய். உலகத்தில் ஆளை உருக்கி விடும் துன்பம் ஒன்று உண்டானால் அது காதல்தான்!

வார்த்தைகள் மெதுவாக அடங்கியதும் விசும்பலின் ஒலி இலே சாக எழும்பியது. விஜயா என்று அழைக்கப்பட்ட அந்தச் சுந்தரி அவன் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டிருந்தாள். அந்த யுவனின் கரம் அவளது கூந்தலை வருடிக்கொண்டிருந்தது. "அழாதே, விஜி!'' என்று உடைந்த குரலில் அவன் கூறியது கிணற் றுக்குள்ளிருந்து பேசுவதுபோல் இருந்தது.

வேலுவின் மூளை அவர்களது பேச்சைக் கேட்டுக் குழம்பியது. 'இதென்ன இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டு அழுகிறார்கள்? இவர்களது பேச்சில் அடிபட்ட திட்டம், துரோகம் என்ற சொற் களுக்குள் புதைந்திருக்கும் ரகசியம்தான் என்ன?' ஒரு வேளை வழக் கம்போல் எல்லோரும் வரும் முடிவுக்கு அதாவது தங்களுக்கு எதிரா கக் கிளம்பும் சக்தியின் கரங்களுக்கு எட்டாதபடி ஓடிவிடும் முடிவுக் குத்தான் வந்திருக்கிறார்களோ? அப்படி இவர்கள் திட்டமிட்டால் அது எப்படித் துரோகமாகும்? இவர்களது வாழ்வுக்குக் குறுக்குச் சுவர் எழுப்புபவர்கள் அல்லவா உண்மை துரோகிகள்?

"இங்கே நிறுத்து டிரைவர்!''

அவர்களது மன நிலையைப் புரிந்து கொண்டவன்போல் வேலு பக்கத்திலிருந்த திருப்பத்தின் இருள் படிந்த பகுதியில் டாக்ஸியை நிறுத்தினான். இருவரும் கீழே இறங்கினார்கள். அந்த ஆடவன் அவளது வெண்மையான மென்மை பூசிய கரத்தைப் பற்றி, "நாளை ஏழு மணி, மறந்து விடாதே; நேராக ஸ்டேஷனுக்கு வந்துவிடு. இதே டாக்ஸி உனக்காக இங்கு ஆறரை மணியிலிருந்து காத்துக் கொண்டிருக்கும். உனக்காக நான் காத்துக் கொண்டிருப்பேன். தைரியத்தை நழுவ விட்டுவிடாதே!'' என்றான். அந்தச் சுந்தரி கருவண்டு போலிருந்த தன் கண்கள் அலை பாயத் தலையை அழகாக அசைத்தாள். பிறகு அவன் வேலுவிடம், "டிரைவர்! நாளைக்கு இதே இடத்தில் மாலை ஆறரை மணிக்கு இருக்க வேண்டும். இவளைக் காரில் ஏற்றிக்கொண்டு வி. டி. ஸ்டேஷனுக்கு 'டெக்கான் குயின்' புறப்படுவதற்கு அரைமணி முன்னதாக வந்துவிடு. முதல் வகுப்புப் பிரயாணிகள் தங்கும் அறையில் நான் இருப்பேன். இந்தா இருபது ரூபாய். நாளை சரியாக ஆறரை மணிக்கு வந்துவிடு!'' என்று சொல்லியவாறே நோட்டுக்களை வேலுவின் கையில் திணித் தான். வேலு வாயெல்லாம் பல்லாக, மனமெல்லாம் மகிழ்ச்சி பொங்கி வழிய, "இந்த வேலுகிட்டே ஒரு விஷயத்தை ஒப்பிச்சா

அதை முடிக்கிற வரைக்கும் கண்மூட மாட்டான்!'' என்று கூறினான் அவர்கள் மொழியிலேயே.

''அது மட்டுமல்ல, அப்பனே! இது பரம ரகசியமாக இருக்க வேண்டும்!''

"ஆ, அதென்ன அப்படிச் சொல்லிப்பிட்டீங்க. இந்த நெஞ்சுக் குள்ளே ஒரு விஷயத்தைப் போட்டுட்டேன்னா அப்புறம் கடவுளே வந்தாலும் அறிஞ்சுக்க முடியாதுங்க. நீங்க கிஞ்சித்தும் பதறாதீங்க!''

கடவுள் என்ற சொல்லைக் கேட்டதும் அந்த யுவதி திடுக்கிட் டாற்போல நிமிர்ந்து பார்த்தாள். அந்த ஒரே வினாடிக்குள் அவள் முகத்தில் விவரிக்க முடியாத கலவரத்தின் நிழல் படிந்து மறைந்தது. அவள் சட்டென்று, ''ரொம்ப நேரமாகிவிட்டது, நான் வருகிறேன்!'' என்று கூறிவிட்டு வீதியில் இறங்கி விடு விடுவென்று நடக்க ஆரம் பித்தாள். அடுத்த முனையில் திரும்பும்போது அவள் முகத்தைத் திருப்பி அந்த இளைஞனை ஒரு தடவை பார்த்தாள். அவன் கரத்தை ஆட்டினான். அடுத்த வினாடி அவள் உருவம் மறைந்துவிட்டது.

மறு நாள். அரோரா தியேட்டரில் ஆறரை மணிக் காட்சிக்கு 'க்யூ' நிற்கும்போது, வேலுவின் டாக்ஸி குறிப்பிட்ட இடத்தில் வந்து நின்றுவிட்டது. டாக்ஸியை ஒட்டியிருந்த காம்பவுண்டு சுவரின் உட்புறத்தில் வளர்ந்து வீதிபக்கம் கவிந்திருந்த மஞ்சள் சிவந்த மலரின் கொடி பரப்பிய சுகந்தம் 'கம்'மென்று வீசியது. முன் பனிக்கால மாதலால் இயற்கை தன் நீல நிறத்திரையை மெல்ல மெல்ல இழுத்து உலகத்தை மறைத்துக்கொண்டிருந்தது. தெருவின் முனையில் பதிந்த வேலுவின் கண்கள் விஜயாவின் உருவத்தை எதிர்பார்த்துக்கொண் டிருந்தன. இன்னும் சிறிது நேரத்தில் அவள் வந்துவிடுவாள்! சில மணி நேரத்தில் அவள் அந்தக் கலை பொருந்திய வாலிபனுடன் ரயில் வண்டியில் பிரயாணம் செய்துகொண்டிருப்பாள். அவர்களது வாழ்க்கைப் பகுதியின் இரண்டாவது அத்தியாயம் இன்பமான பிரயாணத்துடன் ஆரம்பமாகும். பிறகு 'என்ஜின் லைட்'டின் பிரகாச மான வெளிச்சத்தில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை விரிந்து கிடக் கும் ஒளி நிறைந்த பாதையைப்போல் அவர்களது வாழ்க்கையும்...!

வேலாயுதம் தன் கைக்கெடிகாரத்தைப் பார்த்தான். ஏழு அடிக்க இன்னும் இரண்டு நிமிடங்கள் இருந்தன. அவன் உள்ளத்தில் ஒரு பரபரப்பு மூண்டது. அவள் ஏன் இன்னும் வரவில்லை?

தெருவில் போவோரும் வருவோருமாக இருந்தார்கள். முனையில் திரும்பிய எத்தனையோ ஸ்திரீகள் அவனை நோக்கி வந்து அவனையும் தாண்டிச் சென்றார்கள். ஆனால் கொழுந்து விட்டெரியும் அழகுடைய அந்த நங்கையை மட்டும் காணவில்லை! கடிகாரத்தின் நீண்ட முள் வெறி பிடித்ததுபோல் சுற்றுவதாகத் தோன்றியது. மணி ஏழைக் கடந்து ஐந்து நிமிஷங்கள்...பத்து...பதினைந்து...வேலுவின் இதயம்

படபடவென்று அடித்துக்கொண்டது. ஒருவேளை...ஒருவேளை அவள் வரவே மாட்டாளோ? தன் மனத்தை மாற்றிக்கொண்டிருப்பாளோ? அல்லது விஷயம் வெளிப்பட்டுக் குடும்பத்தினர் அவளை ஓர் அறையில் அடைத்துவைத்து, "பெண்ணே! இப்பொழுது உன்னுடைய காதல் என்ன செய்கிறது, பார்ப்போம்!" என்று சவால் விட்டுக் கொண்டிருக்கிறார்களோ?

வேலு நம்பிக்கை இழக்கும் தறுவாயில் மறுமுனையில் விஜயாவின் உருவம் தோன்றி வேகமாக அவனை நோக்கி முன்னேறியது. தன் முகத்தை முக்காடிட்டுக்கொண்டு பதற்றத்துடன் வந்தவள் டாக்ஸியின் கதவைத் திறந்து உள்ளே கோழிக்குஞ்சைப்போல் பதுங்கிக்கொண்டாள். வேலு வண்டியை 'ஸ்டார்ட்' செய்து 'மெயின்' ரோட்டில் விட ஆரம்பித்தான்.

"ஏம்மா, இத்தனைநேரம்? உங்களை எதிர்பார்த்துஎதிர்பார்த்துக் கண்ணு பூத்துப் போச்சுங்க. ஏழு நாற்பத்தைந்துக்கு, 'டெக்கான் குயின்' புறப்பட்டுவிடுமே. இன்னும் இருபது நிமிசத்திலே சேர்ந்தாகணுமே!" என்றதும் 'ஆக்ஸிலேட்டரை' அழுத்தினான். வண்டி வேகத்தால் உந்தப்பட்டு விரைந்தது.

"இன்னும் வேகமாக விடு, அப்பா!"

மைல் முள் பத்து, இருபது என்று ஏறிக் கொண்டிருந்தது. தன்னை மறந்த நிலையில் வேலுவின் கைகளை வேறு ஏதோ ஒரு சக்திதான் இயக்கியிருக்கவேண்டும். இப்பொழுது வண்டி நாற்பது'மைல் வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது. ஐ...ய்...யோ இதென்ன?... அடுத்த திருப்பத்திலிருந்து மெயின் ரோட்டில் கலக்க வரும் இந்த ராட்சச லாரி...

வேலு 'பிரேக்' போட்டு வண்டியை நிதானப்படுத்துவதற்குள் குறுக்கே பாய்ந்த மலைபோன்ற லாரியின்மீது டாக்ஸி பயங்கர சத்தத்துடன் மோதியது. "வீல்!" என்ற ஒரு அலறலின் எதிரொலிமட்டும் எங்கும் பரவியது.

*

'ஜஹாங்கீர்' ஆஸ்பத்திரியின் இரண்டாவது மாடியில் அறுபத்தொன்றாவது வார்டில் பிரவேசித்த நர்ஸ் ஒரு கணம் ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்து நின்றாள். கட்டிலில் பிரக்ஞையிழந்து உடம்பு முழுவதும் கட்டுக்களுடன் கிடந்த ஆசாமியின் முகம் அசைந்து கொண்டிருந்தது. அவன் கண்கள் மெல்லத் திறந்துகொள்வதைக் கவனித்த நர்ஸ் இளநகை செய்தாள். திடீரென்று அவன் கண்களில் எதையோ ஞாபகப்படுத்திக் கொண்ட ஒரு உணர்ச்சி பிரதிபலித்தது. சடக்கென்று கட்டிலில் எழுந்து உட்கார முயன்ற அவனை நர்ஸ் பாய்ந்து வந்து—பிடித்துக் கொண்டு, "இப்பொழுது நீ எழுந்திருக்கக் கூடாது" என்று கூறினாள்.

நர்ஸ் ஒரு கணம் அவனை வெறித்துப் பார்த்தாள். பிறகு, "உனக்கு உடம்பு பூர்ணமாகக் குணமாக வில்லைபோலிருக்கிறதே. இப்பொழுது நீ பேசவேகூடாது!'' என்றதும் சுவரில் தொங்கிய குறிப் பேட்டில் எதையோ கிறுக்கிவிட்டுக் கவுன் சரசரக்க வெளி யேறினாள்.

மாலையில் டாக்டர் வந்தார். அவரைப் பார்த்தவுடன் வேலு மரியாதைக்காக எழுந்து உட்கார முயற்சி செய்தான். காலையி லிருந்ததை விட இப்பொழுது அவன் முகம் தெளிவடைந்திருந்தது; சற்றுத் தெம்பும் ஊறியிருந்தது.

"உடல்நிலை எப்படி இருக்கிறது, வேலாயுதம்?'' என்று கேட்டுக் கொண்டே டாக்டர் கட்டுக்களையும் நாடியையும் பரிசோதித்தார்.

"உடம்பு தேவலீங்க. ஆனால் மனசுதான் சரியில்லை. என் னென்னவோ எண்ணங்கள் தோன்றி மனசு ரொம்பவும் கஷ்டப்படு துங்க'' என்ருன் வேலு வெகுளியாக.

டாக்டர் மெல்லச் சிரித்தார். சிரிக்கும்போது முகத்தில் விழுந்த சுருக்கம் அவருக்குக் குறைந்தது நாற்பது வயதாவது இருக்கும் என்று மதிப்பிடத் தோன்றியது. வேலுவுக்கு அவர் கூறிய பதில் அவருடைய ஆழ்ந்த அநுபவத்தைப் பறைசாற்றியது: "எனக்குக் கூடத்தான் மனம் சரியாக இல்லை. நம்முடைய கடமையில் நாம் முன்னேறும்போது கவலைகள் மனத்தை விட்டுத் தானகவே அகன்று விடுகின்றன. இல்லையா, வேலாயுதம்? நான் சொல்வது சரிதானே?''

"ஆமாங்க... உம்...ஒரே ஒரு விஷயம் உங்ககிட்டே கேட்கணும், என்னுடைய டாக்ஸியில் பிரயாணம் செய்த அம்மாள்...?''

"விபத்து நடந்த இடத்திலேயே...!''

"என்ன? இறந்துவிட்டார்களா? ஐயையோ. நான் கட்டின கோட்டை யெல்லாவற்றையும் இடிச்சுத் தள்ளிப்பிட்டேனே யா...வி!''

"அந்த அம்மாளை உனக்கு எப்படித் தெரியும், வேலு?''

"நல்லாக் கேட்டீங்க, டாக்டர்! அந்த அம்மாளைப பார்த்துப் பேசக் கொடுத்து வைச்சிருக்கணுமே, டாக்டர். அந்தச் சிரிச்ச முகமும், கொள்ளைகொள்ளும் அழகும்... அது ஒரு தெய்வப் பிறவிங்க. நான் முன்னேயே நினைச்சேன். இத்தனை அழகு ஜ்வாலை விட்டெரி யுதே, மனுசனை எரிச்சுடுமேன்னு. ஆனல் அது தன்னையே எரிச்சுக் கிடுத்து. ஒரு வேளை அன்னிக்கு அவங்க ரயில்லே போயிருந்தாங் கன்ன ரயிலே கீழே விழுந்து அந்த ஆளு பொசுங்கிப் போனலும் போயிருப்பாங்க. அது ஆளை எரிக்கும் அழகு!''

"யாரப்பா அந்த மற்றொரு ஆசாமி?'' டாக்டரின் குரலில் ஒலித்த நடுக்கத்தை வேலு கவனிக்கவில்லை. அதனல் அவன் எத்தகைய பாதகம் செய்துவிட்டான்?

"அது யாருன்னு தெரியாதுங்க. தினமும் அவங்க சந்திச்சுப் பாங்க. டாக்ஸியிலே திரும்பி வருவாங்க. 'ஆக்ஸிடெண்ட்' நடந்த முந்தின நாள் அவங்க இரண்டுபேரும் 'இனிமே பயந்து பயந்து சந்திக்க முடியாது. ஓடிடுவோம்'னு பேசிகிட்டாங்க. டாக்டர், உங்க உடம்புக்கு என்ன?...ஏன் இப்படி உங்க முகம் வெளுத்துப் போச்சு...நர்ஸ், நர்ஸ்!"

"உஸ்...நர்ஸைக் கூப்பிட வேண்டிய அவசியமில்லை வேலு! உன்னை அறியாமல் நீ எனக்குக் கொடுமை செய்துவிட்டாய். நீ கூறிய விஷயங்கள் இதுவரையில் எனக்குத் தெரியாது. தெரியாமலேயே இருந்திருக்கக் கூடாதா என்றுகூட இப்பொழுது தோன்றுகிறது!" இப்படிச் சொல்லிவிட்டு டாக்டர் சட்டென்று எழுந்து வெளியே சென்றார்.

டாக்டர் வெளியில் சென்றதும் நர்ஸ் வேகமாக ஓடிவந்தாள்.

"என்னைக் கூப்பிட்டது நீதானே!"

"ஆமாம்!"

"என்ன வேண்டும்?"

"ஒரே ஒரு விஷயம். என்னுடைய டாக்ஸியில் பிரயாணம் செய்த அந்த அம்மாளை டாக்டருக்குத் தெரியுமா?"

"தெரியும், மிக நன்றாகத் தெரியும்!"

"அவள் யார்?"

"அவருடைய இரண்டாவது மனைவி!"

# மீன லோசனி

'ஸோமாஸ்'

''நமஸ்காரம். சித்திக்குத் தாங்கள் ஒழுங்காக அனுப்பி வந்த பணத்தைத் திடீரென்று நிறுத்தி விட்டீர்கள். இரண்டு மாதங்களாக உங்கள் சித்தி மிகவும் சிரமப்படுகிறாள். ஞாபகப்படுத்தி எழுதிய கடிதத்துக்கும் பதில் இல்லை. உங்களுக்கு உடம்புக்கு ஏதாவது நேர்ந்துவிட்டதோ என்று சித்தி வருத்தப்படுகிறாள். இந்தக் கடிதத்துக்கும் பதில் இல்லையென்றால் உங்கள் சித்தி புறப்பட்டு அங்கே வந்துவிடுவாள்.

உங்கள் சித்தி சொல்படி,
மீனலோசனி.''

இந்தக் கடிதத்தைப் படித்ததும் கேசவனுக்குக் கோபம்தான் பொத்துக்கொண்டு வந்தது. ஆனால் அந்தக் கடிதம் முத்து முத்தாக எழுதப்பட்டிருந்ததாகையால் உடனே கிழித்தெறிய மனம் வரவில்லை. அதை எழுதியவள் ஒரு இளம் பெண் என்று அவனது உள் மனம் அவனுக்கு ஏனோ சொல்லிற்று. அந்தக் கையெழுத்தின் அழகைப் பார்க்கும்போதே அந்தக் கடிதத்தை எழுதியவளின் அழகை மானசீகமாக அவனால் காண முடிந்தது.

சித்தி! அவளை நினைக்கும்போதே அவனுக்குக் கோபமாக வந்தது. அவன் தகப்பனார் மட்டும் இரண்டாந்தாரமாக அவளை மணக்காதிருந்தால் அவன் மனம் இத்தனை தூரம் சஞ்சலம் அடைய நேர்ந்திராது. இத்தனைக்கும் அவன் இன்னும் சித்தியைக் கண்ணால்கூடப் பார்த்ததில்லை.

கேசவனுக்கு மூன்று வயதாயிருக்கும்போதே அவன் தாயார் இறந்துவிட்டாள். குழந்தைப் பிராயமாதலால் தாயைப் பிரிந்த துயரம் அவனை அதிகமாக வாட்டவில்லை. ஆனால் அவன் தகப்பனார் மனைவியைப் பிரிந்த துக்கத்தில் பாதி உடம்பாகிவிட்டார். குழந்தை கேசவன் மட்டும் இல்லை என்றால் அவர் தம் உயிரையே மாய்த்துக்கொண்டிருப்பார். கேசவனை வளர்ப்பதற்காக அவர் துக்கத்தை ஒருவாறு மறந்து இருந்தார். அவர் ஒரு மிராசுதாராகையால் அவருக்கு வாழ்க்கையில் வேறு கஷ்டம் இல்லை. ஆகவே அளவுக்கு மீறி மிகவும் செல்வமாகக் கேசவனை வளர்த்தார். கேசவன் எதை விரும்பினாலும் அது மறு கணம் அவன் கைக்கு வந்துவிடும். வயது வளருவது போலவே நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகக் கேசவனிடம் முரட்டுப் பிடிவாதமும் வளர்ந்துகொண்டே வந்தது.

கேசவன் நாலாம் பாரம் வரையில் உள்ளூரிலேயே படித்தான். அவன் வகுப்பு மாணவர்கள் சென்னைக்குப் போய்ப் படிப்பதை அறிந்து அவனும் சென்னைக்குப் போக விரும்பினான். கேசவன் ஒரு காரியத்தைச் செய்ய விரும்பினான் என்றால் அதை மாற்றத் திரி நேத்திரனான பரமசிவனாலேயே முடியாது. குழந்தைப் பிராயத்தில் வளர்ந்த பிடிவாதம் இப்பொழுது வலுப்பட்டு வைரம் பாய்ந்து அசைக்க முடியாதபடி ஆகிவிட்டது. சென்னையில் ஒரு வீடு பார்த்து அங்கு ஒரு சமையற்காரனையும் அமர்த்தி, கேசவனைச் சென்னையில் ஓர் உயர்நிலைப் பள்ளியில் சேர்ப்பதைத் தவிர அவன் தகப்பனாருக்கு வேறு வழியில்லை என்றாகிவிட்டது. கேசவன் எஸ். எஸ். எல்.ஸி. யில் தேறிக் கல்லூரியில் மேல் படிப்புக்குச் சேர்ந்தான். வசதியாக ஹாஸ்டலிலேயே தங்கினான். அவன் போக்கை மாற்ற முடியவில்லை யாதலால் அவன் தகப்பனார் அவன் வழியே செல்ல வேண்டிய தாயிற்று.

ஒருவாறு 'இண்டர்மீடியட்' பரீட்சை முடிந்தது. கேசவனுக்குத் தான் பரீட்சையில் எப்படியும் தேறிவிடுவோம் என்று பரிபூரண நம்பிக்கையிருந்தது. பரீட்சை முடிந்ததும் ஊருக்குக் கடிதம் எழுதிப் போட்டுவிட்டுச் சில நாட்கள் நிம்மதியாக இருந்தான் கேசவன். நண்பர்களுடன் அரட்டை அடித்துக்கொண்டும் சினிமா, நாடகம் பார்த்துக்கொண்டும் குஷியாகக் காலம் கழித்துக் கொண் டிருந்தான்.

இந்தச் சமயத்தில்தான் அவன் மன நிம்மதியை இழக்கச் செய்த அந்தக் கடிதம் வந்தது. அவன் அந்தக் கடிதத்தைக் கொஞ்சம் கூடம் எதிர்பார்க்கவில்லை. அவன் தாயார் இறந்து வெகு நாட்களுக் குப் பிறகு தகப்பனார் இப்படி அடியோடு மாறிவிடுவார் என்று கன விலும் நினைக்கவில்லை. தன் தாயார் ஸ்தானத்தில் இன்னொருத்தி இருப்பதை அவனால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. அப்பா எப்படி இவ்வித முடிவுக்கு வந்தார்? இவ்வளவு விரைவில் அம்மா இறந்த துக்கத்தை எப்படி மறந்தார் என்பதுதான் அவனுக்கு ஆச் சரியமாக இருந்தது.

அப்பா இரண்டாந்தாரம் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறார் என்று நினைத்தாலே அவனுக்கு, துக்கம் துக்கமாக வந்தது. ஐம்பது வயதான தன் அப்பாவுக்கு இப்படி ஒரு மனத் தளர்ச்சி ஏற்படுவானேன் என்று நினைத்துக் கேசவன் மனம் புழுங்கினான்.

அப்பாவின் கடிதம் சுருக்கமாக, ஆனால் அழுத்தமாக அவ ருடைய தீர்மானத்தை அவனுக்குத் தெரிவித்தது.

" அன்புள்ள கேசவனுக்கு,

அநேக ஆசீர்வாதம். இந்தக் கடிதத்தை மிகவும் அவசரத்தில் எழுதுகிறேன். விவரம் எல்லாம் நேரில் பேசிக் கொள்ளலாம்.

நான் பல காரணங்களை உத்தேசித்து, முக்கியமாக உன் நன்மைக்காக, சுந்தரியை இரண்டாந் தாரமாக மணந்துகொள்ள நிச்சயித்துவிட்டேன். உனக்கும் பரீட்சை முடிந்துவிட்டபடியினால் எப்படியும் நீ இங்கு வரவேண்டியதுதான். நீ இன்றே புறப்பட்டுவிடு. மற்றவை நேரில்.

அன்புள்ள,

அப்பா.''

இந்தக் கடிதத்தைப் படித்ததும் கேசவன் தமிழ் சினிமாக்களில் வரும் கதாநாயகன் மாதிரி தலையை இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு, ''அப்பா! அப்பா! அப்பா!'' என்று மூன்று முறை அலறினான். பிறகு, ''ஹஹ் ஹஹ் ஹா!'' என்று சினிமாச் சிரிப்பு ஒன்று சிரித்தான்.

'ஐயோ! அன்புள்ள அப்பா! என்ன அன்பு வேண்டிக் கிடக்கிறது! என்னுடைய நன்மையை உத்தேசித்துத்தான் இவர் மறு விவாகம் செய்துகொள்ளுகிறாராமே! இப்படி எழுதினால் இவருடைய சுயநலம் ஒருவருக்கும் தெரியாது என்று எண்ணமா...?' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான் கேசவன். அவன் உள்ளம் பொருமியது.

குழந்தைப் பருவத்திலிருந்து படிந்துவிட்ட அவனது முரட்டுப் பிடிவாத குணம் என்னும் பாம்பு தகப்பனாரின் கடிதத்தைக் கண்டதும் சீறிப் படமெடுத்து ஆடியது. அப்பாவின் கடிதத்தில் கண்ட விஷயத்தைப் பற்றிச் சிறிதும் அவன் யோசித்துப் பார்க்க நினைக்கவில்லை. ஊருக்குப் போய் அப்பாவின் முகத்தில் விழிக்கவே அவனுக்கு விருப்பமில்லை. உடனே யாருடனும் சொல்லிக்கொள்ளாமல் எங்கேனும் ஒரு கண் காணாத தேசத்துக்குப் போய்விட வேண்டும் என்று அவன் மனம் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கியது.

நல்ல வேளையாக அவனது திட்டத்தை ஒழுங்காக நடத்துவதற்குச் சாதகமாகப் பரீட்சையும் முடிந்துவிட்டது. அவன் அப்பொழுது இருந்த உள்ளக் குமுறலின் வேகத்தில், பரீட்சை முடிவைப் பற்றியோ தனது வருங்கால வாழ்வைப் பற்றியோ கொஞ்சங்கூடப் பொருட்படுத்தவில்லை.

கேசவன் ஒரு துண்டுக் கடிதத்தை எடுத்து அதில் பின்வருமாறு எழுதினான்:

''அப்பா அவர்களுக்கு,

என் நன்மையை உத்தேசித்து, நீங்கள் செய்ய உத்தேசித்திருக்கும் அக்கிரமமான காரியத்துக்கு ஒரு நாளும் நான் சம்மதிக்க மாட்டேன். நேரில் அங்கு வந்து உங்களோடு இதுபற்றி வாதம் செய்து கசப்பை வளர்த்துக்கொள்ளவும் நான் தயாராய் இல்லை. நான் எங்கேயோ போகிறேன். என்னைத் தேட முயல்வது உங்களுக்கு வீண் சிரமம்.

கேசவன்.''

இந்தக் கடிதத்தைத் தன் தகப்பனருக்கு அனுப்பிவிட்டு, கேசவன் அன்றைக்கே தன் அறையைக் காலி செய்துகொண்டு பம்பாய்க்குச் சென்றுவிட்டான். அங்கு அவனது நண்பன் ஒருவனின் உதவியால் ராணுவத்தில் சேர்ந்துவிட்டான்.

நாலைந்து வருஷங்கள் சென்றுவிட்டன. கேசவன் இப்பொழுது ராணுவ இலாகாவில் ஒரு அதிகாரி. அவனுடைய முரட்டுப் பிடிவாத குணம் அந்த இலாகாவில் படிப்படியாக விரைவில் முன்னுக்கு வரப் பெரிதும் உதவியாயிருந்தது. முன்பு எந்தக் குணம் அவனுக்கு ஒரு பெரிய குறையாயிருந்ததோ, அந்தக் குணமே இப்பொழுது அவன் இலாகாவில் அவனுக்கு மிகவும் நல்ல பெயரைக் கொடுத்தது; கண்டிப்பும், கருருமாக இருந்து மேலதிகாரியின் தயவை அவன் வெகு விரைவிலேயே பெற்றுவிட்டான்.

இந்திய ராணுவத்தில் சேர்ந்து திறமையாகச் சேவை புரிந்து நல்ல பெயருடன் தாய் நாடு திரும்பினன். ஜபல்பூருக்கு வந்து சேர்ந்ததுந்தான் அவனுக்குத் தாய்நாட்டின் நினைவு, மீண்டும் பிறந்த நாட்டைப் பார்க்க வேண்டும் என்னும் ஓர் ஆர்வம் எல்லாம் திரும்பின. அதற்கு ஏற்றாற்போல், அவன் தங்கியிருந்த தென்னிந்தியப் பிரமுகர் வீட்டுக்கு வந்த பத்திரிகையில் காணப்பட்ட விளம்பரம் அவனைத் தென்னிந்தியாவுக்கே தூக்கிச் சென்றுவிட்டது.

முக்கிய அறிவிப்பு

திருச்சி ஜில்லா, முசிரி தாலுக்காவில் பெரிய மிராசுதாராயிருந்த வேதராமன் மூன்று மாதங்களுக்கு முன்பு காலமாகிவிட்டார். அவரது ஏகபுத்திரனகிய கேசவன் குடும்பத்தை விட்டுப் பல வருஷங்களுக்கு முன்பே வெளியேறிவிட்டார். அவர் இந்த விளம்பரத்தைக் கண்டதும் தம்மைத் தகுந்த முறையில் ருசுப்படுத்திக்கொண்டு தந்தையின் சொத்துக்கு உரியவராகலாம்.

இப்படிக்கு,
ஜம்புநாதன்,
வக்கீல்.

இந்த விளம்பரத்தைப் பார்த்ததும் கேசவனுக்குத் தன் பழைய நினைவுகளெல்லாம் மனக்கண் முன் தோன்றின.

'அப்பா இறந்துவிட்டாரா? அவர் மறு விவாகம் என்னவாயிற்று...? நிச்சயம் அது நடந்திருக்கும். பின்பு அவள் என்னவானள்? சரி, என்னவா யிருந்தாலும் ஊருக்குப் போய்ப் பார்த்தால் தெரிந்துவிடுகிறது!' என்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு கேசவன் அன்றைய தினமே ஊருக்குப் புறப்பட்டுவிட்டான்.

ஊருக்கு வந்து சேர்ந்து தன்னை ருசுப்படுத்திக்கொண்டு சொத்துரிமையைப் பெறுவதில் கேசவனுக்குச் சிரமம் சிறிதும்

இருக்கவில்லை. வக்கீல் ஜம்புநாதனுக்குக் கேசவனைச் சிறு பிராயம் முதல் நன்ருய்த் தெரியுமாதலால், அவனைக் கண்டதும் மகிழ்ச்சியுடன் அவனுக்கு உரிய சொத்துக்களை அவனது உடைமையாக்கினுர்.

இந்த விவகாரங்களெல்லாம் ஒருவாறு முடிந்ததும், கேசவன் தன் பூர்வீக வீட்டில் புகுந்து ஆராய்ச்சி செய்தான். விலை உயர்ந்த கட்டில், மேஜை, பீரோக்களெல்லாம் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன.

கேசவன் வியப்புடன் யாவற்றையும் ஆராய்ந்தான். அச்சமயம் வக்கீல் உள்ளே வந்து, "மிஸ்டர். கேசவன், இதோ உங்கள் தகப்பனுரின் உயில். அதை ஒரு முறை கவனமாகப் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று கூறி அவனிடம் உயிலைக் கொடுத்தார்.

கேசவன் அதை வாங்கிக் கவனமாகப் பார்த்தான். அதில் சொத்து முழுவதற்கும் அவனையே உரிமையாக்கி யிருந்தது. உயிலின் ஷரத்துக்களைப் படித்தபோது அவன் துள்ளிக் குதித்தான். மாதம் ஐம்பது ருபாய் அவன் சித்திக்கு அனுப்பி வைக்கும்படி அதில் அவன் தகப்பனுர் எழுதியிருந்தார். கன்னியா குமரியிலிருந்து அவன் சித்தியின் விலாசமும் கொடுக்கப்பட்டிருந்தது.

அவனுக்குச் சிறிதும் விருப்பம் இல்லாவிட்டாலும் உயிலின் வாசகப்படி கேசவன் ஒவ்வொரு மாதமும் சித்திக்குப் பணம் அனுப்பி வந்தான். நாலைந்து மாதங்களுக்கெல்லாம் அது அவன் மனத்தை உறுத்துவதற்கு ஆரம்பித்தது. உடனே பணம் அனுப்புவதை அவன் நிறுத்திவிட்டான்.

★

அன்று வந்த கடிதம் அவனை மிகவும் சலனப்படுத்தி விட்டது. கேசவன் இதுவரையில் தன் கல்யாணத்தைப் பற்றியோ, குடும்ப வாழ்க்கையைப் பற்றியோ நினைத்துப் பார்த்ததேயில்லை. அதைப்பற்றி யெல்லாம் நினைத்துப் பார்க்க அவனுக்குச் சந்தர்ப்பமே கிடைத்ததில்லை. இப்பொழுது அவனையும் அறியாமல் அவன் உள்ளத்தில் மணவாழ்க்கையைப் பற்றிய இன்ப நினைவுகள் இலேசாக இழையோடின. அதைத் தகர்த்தெறிய அவன் எவ்வளவோ முயன்றும் அவனுல் இயலவில்லை.

முத்தான கையெழுத்தில் அன்று வந்த கடிதம் அவன் உள்ளத்தில் ஒரு புத்துணர்ச்சியை எழுப்பியது. 'அதை யார் எழுதியிருப்பார்கள்? நிச்சயம் ஒரு பெண்மணிதான் எழுதியிருக்கவேண்டும். கையெழுத்தில் பெண்மையின் பூரண எழிலும் ததும்பி நிற்கிறதே' என்று கேசவன் சிந்திக்கலானுன். அவன் சிந்தனையின் நடுவே ஓவிய எழில் கொண்ட ஒரு பெண்மணியின் உருவம் நிழலாடியது. ஆனுலும் அவன் மனம் மட்டும் உறுதியாயிருந்தது. சித்தியின் விஷயத்தில் அவன் தன் அபிப்பிராயத்தைச் சிறிதும் மாற்றிக்கொள்ளத் தயாராயில்லை.

ஒரு வாரம் சென்றது. அன்று காலையில் அவன் வீட்டு வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது. அதிலிருந்து சுமார் நாற்பது வயது மதிக்கக்கூடிய ஒரு மாது இறங்கினாள். அவளைக் கண்டதும் கேசவ னுக்கு அவனையும் அறியாமல் ஒரு மரியாதை ஏற்பட்டது.

''வாருங்கள்!'' என்று கைகூப்பி அவளை வரவேற்றான்.

''என்ன...உனக்குத் தெரிந்திருக்காது. நான்தான் உன் சித்தி சுந்தரி!'' என்று அந்தப் பெண்மணி சொல்லிக்கொண்டே உள்ளே வந்தாள்.

கேசவன் முகம் அந்த வார்த்தைகளைக் கேட்டதும் கோபத்தி னால் சிவந்தது. ஆனால் ஏனோ அவளைப் பார்த்து அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அவளை நேரில் காணும்போது என்னவெல் லாம் ஏசிப் பேசவேண்டும் என்று கற்பனை செய்து வைத்திருந்தான்!

''கேசவா, உனக்கு விருப்பமில்லையென்றால் நான் இப்போதே ஊருக்குப் போய்விடுகிறேன். உன்னை நேரில் ஒரு முறை கண்டு விட வேண்டும் என்று ஆவலாயிருந்தது......!'' என்று கூறிச் சுந்தரி அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

கேசவனுக்கு என்ன சொல்லுவதென்றே தோன்றவில்லை. 'போ வெளியே!' என்று அவளைப் பார்த்துச் சொல்ல முடியாமல் ஏதோ ஒன்று அவன் தொண்டையை அடைத்தது. விறு விறு என்று அவனேபோய், சுந்தரியின் மூட்டை, பெட்டிகளை உள்ளே கொண்டு போய் வைத்தான். சுந்தரியும் மலர்ந்த முகத்துடன் உள்ளே போனாள்.

கேசவன் பல் துலக்கி ஸ்நானம் செய்துவிட்டு வருவதற்கும், சுந்தரி காப்பி தயார் செய்து கூடத்துப் பெஞ்சியின்மேல் கொண்டு வந்து வைப்பதற்கும் சரியாயிருந்தது. கூடம் முழுவதும் காப்பியின் நறுமணம் கம்மென்று கமழ்ந்தது. கேசவன் அதையெடுத்து ஆற்றி ரஸித்துச் சாப்பிட்டான்.

காப்பியைச் சாப்பிட்டுக்கொண்டே கூடத்தையும், சமையலறை யையும் ஒரு முறை பார்த்தான்.

அடாடா! சமையலறைதான் என்ன சுத்தமாயிருந்தது! அதற் குள் பெருக்கி, அடுப்பு மெழுகிக் கோலம் போட்டு எவ்வளவு அழகா யிருக்கிறது சமையலறை! முன்பு சமையலறையை எவ்வளவு மோச மாக வைத்திருந்தான்! போட்டது போட்டபடியே கிடக்குமே அங்கே!

கேசவனுக்கு ஒரே வியப்பாயிருந்தது. அவனையும் அறியாமல் சித்தியிடம் அவனுக்கு ஒருவித மரியாதை ஏற்பட்டது.

'அப்பா செய்த பிழைக்குச் சித்தி என்ன செய்வாள்!' என்று அவனை அவன் உள்மனம் கேள்வி கேட்டது.

